


ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கோயிலொழுகு




பதிப்பாசிரியர்

**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

ஆசிரியர் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"

3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 620 017.


விலை ரூ 24/- தபாற் கூலி தனி


ஸ்ரீ ரங்கநாச்சியார் அச்சுக்கூடம்,

214, கீழ உத்திர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி - 6

☎ : (0431) 434398

    

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கோயிலொழுகு


பதிப்பாசிரியர்:-

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

ஆசிரியர் "ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்"

3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 620 017.



பதிப்பித்தவர்கள்:

1.ஸ்ரீ.ரா.ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது

டிரஸ்டிகள்:-

S.கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் M.A., B.L.,அட்வகேட்

S.ராம அய்யங்கார். B.Sc., B.L.,அட்வகேட்

2. ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ

214, கீழ உத்தர வீதி, ஸ்ரீரங்கம், திருச்சி -6

விலை ரூ 24/- தபாற் கூலி தனி

ஸ்ரீரங்கநாச்சியார் அச்சுக்கூடம்

214, கீழ உத்தர வீதி, ஸ்ரீரங்கம் திருச்சி-6 [0431] 434398

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முன்னுரை

[ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
ஆசிரியர், 'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்', திருச்சி-17.]

"கோயில் ஒழுகு" என்னும் நூல், "கோயில்" என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவராலும் வழங்கப்படும் ஸ்ரீரங்கம் கோயில் வரலாற்றை, இதிஹாஸபுராண காலத்திலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிவரை கூறுவதாகும். ஸ்ரீரங்கம் கோவில் அதிகாரிகளால் செவிவழிச்செய்திகளையும், கல்வெட்டுகளையுங்கொண்டு அவ்வப்போது தொகுக்கப்பட்டு உருவான நூல் இது. இதேபோல் திருமலையின் வரலாற்றைக் கூறும் "திருமலை ஒழுகு" என்னும் நூலும் திருப்பதியில் அச்சிடப்பட்டுள்ளது.

எம்பெருமானார் ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹத்தை ஒழுங்குபடுத்தியவர் என்பது பிரஸித்₃த₄ம். "ராமாநுஜார்ய தி₃வ்யாஜ்ஞா வர்த்த₄தாம் அபி₄வர்த்த₄தாம்...ஸ்ரீமந் ஸ்ரீரங்க₃ ஸ்ரியமநுபத்₃ரவாம் அநுதி₃நம் ஸம்வர்த்த₄ய" [ராமாநுஜா சார்யருடைய சிறந்த ஆணை மேன்மேலும் வளரட்டும்; ஸ்ரிய:பதியே! திருவரங்கச் செல்வத்தை இடையூறில்லாமல் தினந்தோறும் வளர்த்தருள்வாய்] என்று ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் முழுதும் இன்றும் எல்லாக்கோயில்களிலும் வீடுகளிலும் தினந்தோறும் அநுஸந்தி₄த்து வருவது இதை வலியுறுத்தும். எம்பெருமானார் ஸ்ரீரங்கம் கோயில் நிர்வாஹத்தை ஒழுங்குபடுத்திய முறை கு₃ருபரம்பரை நூல்களிலும் காணக்கிடைக்கிறதானாலும், கோயிலொழுகிலேயே அது விரிவாகக் குறிக்கப்பட்டுள்ளது. இதிஹாஸ புராணகால வரலாறுகளும், ஆழ்வார்கள் எம்பெருமானார்க்கு முந்திய ஆசார்யர்கள் கால வரலாறுகளும் இதில் சுருக்கமாகவே குறிக்கப்பட்டு, எம்பெருமானார் கால வரலாறுகள் மிக விரிவாகக் குறிக்கப்பட்டிருப்பதால், இக்கோயிலொழுகு எம்பெருமானார் காலத்திலோ அல்லது அதை ஒட்டியோ எழுதத் தொடங்கப்பட்டிருக்கவேண்டும் என விளங்குகிறது.

1888-ம் வருஷமும், 1909-ம் வருஷமும் அச்சிடப்பெற்ற இரு பதிப்புகளை ஆதாரமாகக்கொண்டு இப்பதிப்பு அச்சிடப்

பட்டுள்ளது. இதில் 1888-ம் ஞு பதிப்பே சரியான முறையில் அமைந்துள்ளது என்பதை இப்பதிப்பில் 25, 72-ம் பக்கங்களிலுள்ள அடிக்குறிப்புகளிலிருந்து காணலாம்.

திருப்பதி ஸ்ரீ வேங்கடேச்வரா பல்கலைக்கழகத்தில் சரித்திரப் பேராசிரியராயிருந்த (டாக்டர்) V. N. ஹரிராவ் அவர்களால், 1961ல் "கோயில் ஒழுகு" பற்றி விரிவான ஆராய்ச்சி நூல் ஒன்று ஆங்கிலத்தில் வெளியிடப்பெற்றது. அதில் அவர் "கோயில் ஒழுகு"க்கு ஆங்கிலமொழிபெயர்ப் பொன்றையும் இணைத்துள்ளார். [இந்நூல் ராக்ஹெளஸ் & ஸன்ஸ்(பி)லிமிடெட், 3, சுங்குராமசெட்டிதெரு, சென்னை-1 என்னும் விலாசத்தில் கிடைக்கிறது.] அதில் அச்சிடப் படாத ஓலைச்சுவடியொன்றையும், கையெழுத்துப் பிரதி யொன்றையும்கொண்டு (180 முதல் 204 ஈருக) 25பக்கங்கள் மொழிபெயர்ப்பைச் சேர்த்திருக்கிறார். இப்பகுதி நமக்குக் கிடைக்கவில்லை. எவராவது உதவினால் மறுபதிப்பில் சேர்ப்போம்.

வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இந்நூல் இப்போது கிடைக்காமலிருப்பது கண்டு ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி இதை அச்சிடும்படி நியமித்தருளினார். அவரால் ஸ்தாபிக்கப்பெற்ற க்ரந்த ப்ரகாசந ஸமிதி, எந்தையாரால் ஸ்தாபிக்கப்பெற்ற S. R. S. K. S. டிரஸ்ட் ஆகிய இரண்டு நிறுவனங்களின் உதவியால் இந்நூல் இப்போது வெளிவருகிறது. ஸ்ரீ வைஷ்ணவர்களும், சரித்திர ஆசிரியர்களும் இந்நூலின் உதவிகொண்டு ஸ்ரீரங்கம் கோயில்பற்றியும், வைணவம் பற்றியும், பல சரித்திர உண்மைகளை அறியலாம். இத்தகைய நூல்களை ஆஸ்திகவுலகம் ஆதரித்தால், ஜீயர் ஸ்வாமியும், நாமும் மேலும் பல நூல்களை வெளியிட உதவியாயிருக்கும்.

நள-ஞு
விஜயதசமி
(3—10—76)

ஸ்ரீ வைஷ்ணவ தாஸன்,
**S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
"ஆசிரியர்" ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்.

## விஷயஸூசிகை


| எண் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| 1. | தூர்மவர்மாவின் கைங்கர்யம் | 1 |
| 2. | கிளிசோழன் கைங்கர்யம் | 2 |
| 3. | ராஜமஹேந்திர சோழன் கைங்கர்யம் | 3 |
| 4. | நந்தசோழன் கைங்கர்யம் | 3 |
| 5. | குலசேகரப்பெருமாள் கைங்கர்யம் | 5 |
| 6. | ஆரியபட்டாள்வாசல் | 5 |
| 7. | திருமங்கையாழ்வார் ப்ரபாவம் | 6 |
| 8. | சோளேந்திரஸிம்ஹன் கைங்கர்யம் | 10 |
| 9. | கங்கைதேவர் சிங்கணன் தண்டநாயக்கர் கைங்க்ர்யம் | 11 |
| 10. | விக்ரமசோழனுை அகளங்கன் கைங்கர்யம் | 11 |
| 11. | சுந்தரபாண்டியதேவர் கைங்கர்யம் | 11 |
| 12. | எம்மண்டலங்கொண்டு கோயில் பொன்மேய்ந்த பெருமாள் சுந்தரபாண்டியதேவர் கைங்கர்யம் | 12 |
| 13. | குலோத்துங்கசோழன் கைங்கர்யம் | 15 |
| 14. | கம்பயதண்டயநாயக்கர் கைங்கர்யம் | 15 |
| 15. | கரியமாணிக்கத்தண்டயநாயக்கர் கைங்கர்யம் | 15 |
| 16. | மலைப்பெருமாள் கைங்கர்யம் | 15 |
| 17. | வீரநரசிங்க்தேவர் கைங்கர்யம் | 16 |
| 18. | ஆகுளூர் வரநாதராயர் கைங்கர்யம் | 16 |
| 19. | தேவப்பெருமாள் கைங்கர்யம் | 16 |
| 20. | வாலநாதராயர் கைங்கர்யம் | 16 |
| 21. | திருவிக்கிரமசோழன் கைங்கர்யம் | 16 |
| 22. | பள்ளிகொண்டான்சோழன் கைங்கர்யம் | 17 |
| 23. | கலியுகராமன் கைங்கர்யம் | 17 |
| 24. | திருக்குறளப்பன் ஸந்நிதி | 17 |
| 25. | வல்லபதேவன் கைங்கர்யம் | 18 |
| 26. | திருமங்கைமன்னன் கைங்கர்யம் | 18 |
| 27. | காட்டழகியசிங்கர் | 19 |
| 28. | சோழன் பிரதிஷ்ட்டை | 19 |
| 29. | டில்லீசுவரன் அழகியமணவாளனைக் கொண்டுபோனது | 19 |
| 30. | ஸ்தலத்தார் அழகியமணவாளனை எழுந்தருளப்பண்ணிக் கொண்டுவந்தது | 20 |
| 31. | ஸுரதாணி பெருமாளைத் தேடிக்காணாமல் சரீரம்விட்டது | 21 |
| 32. | கொடவர் அழகியமணவாளனைக் காத்தது | 22 |

33. டில்லீசுவரன் ஆச்சரியப்பட்டது 23
34. திருவரங்க மாளிகையாரையும் வேறே
நாச்சியாரையும் கோயிலில் ப்ரதிஷ்ட்டி₂ப்பித்தது 23
35. அழகியமணவாளனையும் கொடவரையும்
இருளர் கண்டது 24
36. பெருமாளையும் கொடவரையும் சந்திரகிரிப்ரபு
வெளிப்படுத்தினது 25
37. கொடவர் பெருமாளுடன் கோயிலில் எழுந்தருள,
பரிஜநங்கள் தகைந்தது 25
*38. கோபண உடையார், அழகியமணவாளனை
சிங்கபுரத்தில் ஆதரித்து எழுந்தருளப்பண்ணினது 25
*39. கோபணவுடையார், குண்டுஸாளுவயர்,
விருப்பண உடையார் கைங்கர்யம் 27
40. வண்ணானாலே அழகியமணவாளனென்று தெளிந்த
— ராஜேந்திரசோழன் கைங்கர்யம் 28
41. திருத்தாழ்வரைதாஸர், ஈரங்கொல்லி,
பஞ்சுகொண்டான், இசையறியும் பெருமாள்
கூட்டத்தார் என்னும் அருளப்பாடு 30
42. ஸ்ரீமந்நாத₂முனிகள் கல்பித்த கட்டளை 30
43. க₃ாயகஸார்வபௌ₄மனான அழகியமணவாளன்,
பாடுவார்க்கு அரையர் என்னும் திருநாமமும்
குல்லாவும், தொங்கல்பட்டும் ஸாதி₃த்தது 34
44. உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி,
ஆளவந்தார் வைப₄வம் 34
45. ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் வைப₄வம் 35
46 உடையவர் வைப₄வம் 36
47. உடையவர்–ஸந்நிதி₄ பரிகரங்களுக்குக்
கைங்கர்யம் நியமித்தல் 42
48. ப₄ட்டர் வைப₄வம் 58
49. சீராமப்பிள்ளை வைப₄வம் 59
50. கூரநாராயணஜீயர் வைப₄வம் 59
51. பெரியாயி, சிறியாயி வைப₄வம் 67

* 38, 39–விஷயங்கள்–பக்கம் 72 அடிக்குறிப்பில் கண்டபடி அங்கு இருக்கவேண்டியவை.

52. ஈயான் ராமாநுஜாசார்யர் வைப₄வம் 68
53. எம்பெருமானடியாள் கோயிலேக்காத்தது 68
54. அழகியமணவாளப்பெருமாள், ஜோதிஷ்குடி, திருமாலிருஞ்சோலே, கோழிக்கூடு, புங்கனூர் வழியாகத் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினது 71
55. பெருமாள் திருவேங்கடத்துக்கு எழுந்தருளியது 72
56. எம்பெருமானடியாளுக்குக் கட்டளேயிட்டது 72
57. திருவாழிக்கல் பொகட்டது 74
58. பெரியகிருஷ்ணராயர் உத்தமநம்பி கைங்கர்யம் 75
*59. நாக மங்கலம் அண்ணப்பவுடையார் கைங்கர்யம் 75
60. திம்ம ராகுத்தர் கைங்கர்யம் 75
61. ஹரிஹர ராயர் கைங்கர்யம் 76
62. வேத₃ார்ய ப₄ட்டர் ஸ்ரீ கார்யம் நிர்வஹித்தது 76
63. கந்தாடையார் அதீ₄நமாயிருந்த உடையவர் ஸந்நிதி₄யை வேத₃ாசார்யபட்டர் உடன்படிக்கை கொடுத்துத் தன் வசமாக்கினது 76
64. பெரியகிருஷ்ணராயருத்தமநம்பி, பெரியநம்பி வம்ஶஸ்த₂ர் திருவடிகளில் ஆஶ்ரயித்தது 78
65. கஜவேட்டை ப்ரதாபதே₃வமஹாராயர் காலத்தில், உத்தமநம்பி சக்ரராயருடன் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தது 78
66. வழியடிமைநிலேயிட்ட பெருமாளுத்தமநம்பி பிள்ளே கைங்கர்யம் 79
67. உத்தமர்கோயில் ஸ்ரீரங்க₃ராஜர் கைங்கர்யம் 80
68. விருப்பண்ணவுடையார் கைங்கர்யம் 80
69. பெரியஜீயர், உத்தமநம்பியைக்கொண்டு கந்தாடை அண்ணனுக்கு ஏற்படுத்தின மரியாதைகள் 81
70. சக்ரராயர் கைங்கர்யம் 82
71. தென்னயக்கர் கைங்கர்யம் 83
72. சாத்தாத நரசிங்கத₃ாஸர் கைங்கர்யம் 83
73. நம்பெருமாள் 'ஸ்ரீஶைலேஶ த₃யாபாத்ரம்' என்னும் தனியன் ஸாதி₃த்தது 83
74. எல்லேக்கரைமதிள் கட்டினது 84

* 59, 60, 61, 74 to 77, 80 to 84, 89 to 95 தலேப்புகள் 1888-ம் ஞூ பதிப்பில் மாத்திரம் உள்ளன. 1909-ம் ஞூ பதிப்பில் தலேப்புக ளில்லாமல் விஷயங்கள் உள்ளன.

75. அண்ண ஆண்டப்ப உடையார்
திருமலைதந்தான் கைங்கர்யம் 84
76. அண்ணப்ப உடையார் கைங்கர்யம் 84
77. பராசர் கைங்கர்யம் 84
78. புத்தூர் அழகியமணவாளப்பெருமாள் கைங்கர்யம் 84
79. உத்தமநம்பி, சக்ரராயர் நிர்வஹித்தது 84
80. கருட₃வாஹநபண்டி₃தர் கைங்கர்யம் 85
81. அண்ணப்பருடையார் கைங்கர்யம் 85
82. நாகராஜ உடையார் கைங்கர்யம் 85
83. வழியடிமைநிலையிட்ட உத்தமநம்பி கைங்கர்யம் 85
84. பெரிய சக்ரராயர் கைங்கர்யம் 85
85. மூவெந்திறையார் தீராவினைதீர்த்தார்,
திருவேங்கடமுடையான் கைங்கர்யம் 87
86. திருமலைநாதவுத்தமநம்பி கைங்கர்யம் 87
87. க்ருஷ்ணராய உத்தமநம்பி கைங்கர்யம் 89
88. குடல்சாரவாளநயினார் கைங்கர்யம் 89
89. கோ₃விந்த₃ராஜர் கைங்கர்யம் 89
90. கம்பராஜாமல்லர் கைங்கர்யம் 90
91. ஜங்கயநாயக்கர் கைங்கர்யம் 90
92. அப்புள்ளார் ப்ரதிஷ்டை 90
93. கம்பயராஜா கைங்கர்யம் 90
94. ஆழ்வார்ஜீயர் கைங்கர்யம் 90
95. அழகர் கைங்கர்யம் 90
96. ஸாளுவதிருமலைராஜா கைங்கர்யம் 91
97. கந்தாடை ராமாநுஜதா₃ஸர் கைங்கர்யம் 92
98. தே₃வதா₃யம் ராயரதி₄நமானது 96
99. உடையவர் கல்பித்த கட்டுக்குலைந்தது 97
100. நம்பெருமாள் கோயிலிலேயே எழுந்தருளியிருந்தது 97
101. விசுவநாதநாயக்கரைக்கொண்டு,
நரஸிம்ஹாசார்யர் பண்ணின கைங்கர்யம் 97
102. க்ருஷ்ணப்பநாயக்கர் கைங்கர்யம் 98
103. குமாரக்ருஷ்ணப்பநாயக்கர் கைங்கர்யம் 98
104. உத்தமநம்பிக்கும் ப₄ட்டர் திருமலாசார்யனுக்கும்
உண்டான கலஹம் 99

    

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# கோயிலொழுகு

''மாடமாளிகைசூழ் திருவீதியும் மன்னுசேர்திருவிக்கிரமன் வீதியும்
ஆடல்மாறனகங்கன்வீதியும் ஆலிநாடனமர்ந்துறைவீதியும்
கூடல்வாழ்குலசேகரன்வீதியும் குலவிராசமகேந்திரன்வீதியும்
தேடரியதர்மவர்மாவின்வீதியும் தென்னரங்கர் திருவாவரணமே''

என்று பூர்வர்கள் திருவரங்கந் திருப்பதியை அநுப₄வித்தபடியே, பூர்வர்கள் பண்ணின திருப்பணி கைங்கர்யத்துக்கு விவரம்:—

ஆதிப்₃ரஹ்மா ஸ்ரீரங்க₃விமாநத்தை லபி₄த்து ஸத்ய லோகத்திலே அநேகநாள் ஆராதி₄த்தவநந்தரம், அந்த தி₃வ்ய விமாநத்தை இக்ஷ்வாகு லபி₄த்து, அயோத்₄யா பட்டணத்தில் நெடுங்காலம் திருவாராத₄நம் கண்டருளி, தத்₃வம்ஶ்யராய் ஆராதி₄த்து சக்ரவர்த்தித்திருமகன், தம்முடைய க்ருபையினாலே ஸ்ரீரங்க₃விமாநத்தை ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானுக்குக் கொடுக்க, அவனும் அந்த விமாநத்தை ஶிரஸா வஹித்துக்கொண்டு, இரண்டு திருக்காவேரி நடுவிலே ஸ்ரீசந்த்₃ரபுஷ்கரிணிக் கரையிலே கொண்டுவந்து அவ்விமாநத்தை த₄ர்மவர்மா லபி₄த்துப்போர;

## த₄ர்மவர்மாவின் கைங்கர்யம்

திருவாசலும், அமுதுமண்டபமும், கோயிலாழ்வாரைச் சூழ்ந்த திருவெண்ணாழியும், திருவணுக்கன் திருவாசல் திருமதிளும், திருநடைமாளிகை, அழகியமணவாளன் திருமண்டபம் முதலான பல திருமண்டபங்களும், பல

திருமதிள்களும், பல கோபுரங்களும், சேனைமுதலியார் கோயிலும், விமானமும், அதுக்கு வடமேல்புறத்திலே இரண்டாம் திருமதிளில் வடக்கு வாசலுக்குமேலே திருக் கோபுரநயினாரும், திருக்கோபுரமும். சந்த்₃ர புஷ்கரிணிக் கரை ஆஸ்தா₂ந மண்டபமும் கட்டிவைக்கையில் த₄ர்ம வர்மாவின் கைங்கர்யம்.

## கிளிசோழன் கைங்கர்யம்

அதன்பின், அநேககாலத்துக்குப் பிற்பாடு திருக்காவேரி ஸ்தூபிபர்யந்தம் மணல்கொழித்து ப₃ஹுகாலமாய்க் காடு மூடிப்போன வநந்தரம், யாத்₃ருச்சி₂கமாக த₄ர்மவர்மாவின் வகையில் சோழன் அந்தவிடத்திலே ஒருமரத்தின் நிழலிலே யிருக்க, அந்த மரத்தின் மேலே ஒரு * ஶுகமிருந்து

**காவேரீ விரஜா ஸேயம் வைகுண்ட₂ம் ரங்க₃மந்தி₃ரம் ।**
**ஸ வாஸுதே₃வோ ரங்கே₃ஶ: ப்ரத்யக்ஷம் பரமம் பத₃ம் ॥ (1)**

**விமாநம் ப்ரணவாகாரம் வேத₃ஶ்ருங்க₃ம் மஹாத்₃பு₄தம் ।**
**ஶ்ரீரங்க₃ஶாயீ ப₄க₃வாந் ப்ரணவார்த்த₂ப்ரகாஶக: ॥ (2)**

என்று இரண்டு ஶ்லோகத்தையும் அநேகாவ்ருத்தி சொல் லக் கேட்டு, சோழனும் ஆஶ்சர்யப்பட்டு, "இந்தக் கிளி புராணவசநம் சொல்லிற்றே! இதென்ன?" என்று விசா ரித்து, தெரியாதபடியினாலே, ஸ்ரீரங்க₃விமாநத்தை உண்டு பண்ணுகிறதுக்கு, அந்த மரத்துக்கு மேற்கே திருமுடிக்கு நடுவிலே அஸ்திவாரம் பறித்து அரையளவு தலைவரையும் ஏறினவளவிலே, அவன் ஸ்வப்நத்திலே "நாம் அந்த மரத் தின் கீழே இருக்கிறோம்" என்று சொல்ல; அவனும் அந்த மரத்தின்கீழே ஸ்ரீரங்க₃ விமாநம் இருக்கக்கண்டு ஸந்தோ ஷித்து, அந்தக் காடுவெட்டி மணலையும் பறிப்பித்து, கோயி லாழ்வார் விமாநம் முதலாகத் திருவீதியுட்பட பூர்வப்ரா காரம் எல்லாவற்றையும் தென்னாறு வடவாறுகளும் கட்டி வைத்து, பல திருநந்தவநங்களையும் உண்டாக்கி, திருப்

* ஶுகம் - கிளி.

பணித் திருவாராதநங்களும் கண்டருளப்பண்ணி, திருவரங்கம் திருப்பதி என்று விளங்கினது, தர்மவர்மாவின் வகையில் கிளிசோழன் கைங்கர்யம்.

## ராஜமஹேந்திர சோழன் கைங்கர்யம்

ததநந்தரம், ராஜமஹேந்த்ரன், ப்ரதிஸம்வத்ஸரமும் திருக்காவேரி பெருகிவந்தால் திருவணுக்கன் திருவாசலுக்குள்ளே ஊற்றூறலாயிருக்கையில், அத்தைத்துறப்பித்து, திருவனந்தாழ்வான் கண்வளர்ந்தருளுகிறவிடமும் முதலாகத் தளவரிசை பண்ணுவித்து, கோயிலாழ்வாரைச்சூழ எழுந்தருளியிருக்கிற நாராயணர், நாபிநளிநர், நாகஶயநர், நாரஸிம்ஹர் இருக்கிற தளவரிசை மட்டத்துக்கு மேலேயும் எடுத்துக்கட்டி, தூணும் எழவீசிக் கட்டிவைத்துத் தளவரிசையும் படுப்பித்து, இரண்டாம் ஆவரணத்துத் திருமதிள்களும், தெற்குத் திருவாசல் கோபுரமும், வடவண்டைத் திருவாசலும், தர்மவர்மாவின்வகை கைங்கர்யமான திருக்கோபுரநயினார் சேனைமுதலியார் கோவில் தவிரத் திருக்கோபுரமும் தளவரிசையும் ராஜமஹேந்த்ரசோழன் கைங்கர்யமாகையாலே, ராஜமஹேந்த்ரன் திருவீதி என்று வ்யவஹாரம் நடந்துவந்தது.

## நந்தசோழன் கைங்கர்யம்

அநந்தரம்,நிசுளாபுரியிலே தர்மவர்மாவின் வம்ஶ்யரான நந்தசோழன் ராஜ்யம் பண்ணுகிறகாலத்தில், பஹுகாலம் (க) அநபத்யனாயிருந்து ஸ்ரீரங்கநாயகரிடத்திலே அதிப்ரவணராய் தபஸ்ஸைப்பண்ணி, அந்த தபோபலத்தினாலே ஒரு நாள் தாமரைஓடையில் தாமரைப்பூவிலே ஒரு ஶிஶுவாக, ஸ்த்ரீப்ரஜையிருக்கக்கண்டு, அந்த ராஜா ஹ்ருஷ்டராய் அந்தக் குழந்தையைத் தம்முடைய க்ருஹத்திலே கொண்டுவந்து, கமலவல்லி என்று நாமகரணம்பண்ணி வளர்க்குமிடத்தில், அந்தக் குழந்தையும் வளர்ந்து பெரியவளாய்,

(க) அநபத்யன் - குழந்தையில்லாத மலடன்.

ஒத்த பெண்களுடனே விளையாடும் காலத்திலே, ஒருநாள் தோழிகளுடனே லீலோத்₃யாநத்தில் புஷ்பசயம் பண்ணுகிற ஏகஸமயத்திலே, ஸ்ரீரங்க₃ராஜர் குதிரைநம்பிரான்மேலே ஏறியருளி, பலாஶதீர்த்த₂த்துக்கு வேட்டையாட எழுந்தருளுகிறவர், அந்தக் கமலவல்லிக்கு அதிஸௌந்த₃ரராய் விப₄வாவதாரமாக ஸேவைஸாதி₄க்க; கமலவல்லியும் கண்டு மோகித்து, மஹாப்ரயத்நத்தினாலே தோழிமார் தேற்றத் தெளிந்து,தன் வீதியிலே வந்து (3)உந்மத்தை போலேயிருக்க. அந்த ராஜாவும், கமலவல்லியைக் கண்டு, மந்மத₂விகாரம் என்று கணிசித்து, "உனக்கு ஆர்மேலே மநஸ்ஸு இருக்கிறது" என்று கேட்க; கமலவல்லி—தனக்கு ஸ்ரீரங்க₃நாயகரன்றியிலே ஒருத்தரிடத்திலேயும் மநஸ்ஸு இல்லை; தன்னை ஸ்ரீரங்க₃ராஜருக்கு பாணிக்₃ரஹணம் பண்ணுவியும்—என்று சொல்ல; ராஜாவும் ஸந்துஷ்டராய், தன் மந்திரிகளுடனே ஆலோசித்து, தம்முடைய குமாரத்தி கமலவல்லியை ஸ்ரீரங்க₃ராஜருக்குக் கன்னிகாப்ரதா₃நம்பண்ணி, அதிவிஸ்மிதமாகத் திருக்கல்யாண மஹோத்ஸவத்தைப் பண்ணுவித்து, பெண்ணைக் கோயிலுக்கு அனுப்பும்போது ஸ்த்ரீத₄னமாக முந்நூற்றறுபதின்கலம் தங்க அமுதுபடியும், அதுக்கு வேண்டின பருப்பமுதும், கொம்பஞ்சு கொடியஞ்சு கறியமுதும், அவைகளுக்கு வேண்டின சம்பாரங்களெல்லாம் தங்கத்தாலே பண்ணுவித்து அவைகளையும், ஸ்த்ரீகளுக்கு ஸமங்களான நூறு பரிசாரிகைகளையும் கொடுத்தனுப்பிவைக்க; அந்தக் கமலவல்லியும் கோவிலிலே வந்து திருமண்ணுக்குள்ளே புகுந்து அத₃ருஶ்யையாக; அத்தைக் கண்டு ராஜாவும் அதிஸந்துஷ்டராய், அநபத்யராகையாலே தம்முடைய ஸர்வஸ்வத்தையும் பெருமாளதீ₄னம்பண்ணி, திருமாமணி மண்டபங்களும், திருமதிள்களும், திருக்கோபுரங்களும், திருநந்தவநங்கள் முதலானவைகளையும் கட்டிவைத்து, தம்முடைய பட்டணமான உறையூரிலேயும் தம்முடைய குமாரத்தியையும் அதிஸௌந்த₃ர ரூபத்தினாலே

(3) உந்மத்தை - பைத்தியம் பிடித்தவள்.

வஶீகரித்தபடியாலே அழகியமணவாளப் பெருமாளையும் ப்ரதிஷ்டி2ப்பித்து, விமானகோ3புர மண்டப ப்ராகாராதி3களையும் விஸ்த்ருதமாகக் கட்டிவைத்து, அனைத்தழகும் கொண்டருளப் பண்ணுவித்துக்கொண்டிருந்தார். இந்தப்படி உறையூரிலே ப3ஹுகாலம் நடந்தபின்பு, கலியுக3த்திலே ப3ஹுகாலம் சென்ற வநந்தரம் ஒருகால விஶேஷத்திலே ஒரு சோழனுடைய பாபவிஶேஷத்தினாலே மண்மாரிபெய்து பட்டணம் முழுகிப்போயிற்று. அநந்தரம், அதுமுதலாக சோழ தே3ஶாதி4பதிகள் கங்கைகொண்டானிலே வாஸம் பண்ணுகையில், காலவிஶேஷத்திலே உறையூரிலே கொஞ்சமாகக் கோயில்கட்டி, பெருமாளையும் நாச்சியாரையும் ஒரு சோழன் ப்ரதிஷ்டி2ப்பித்தான். கமலவல்லியைத் திருமணம் புணர்ந்தது முதலாக, **"அழகியமணவாள ராஜமஹேந்த்3ரன் திருவீதி"** என்று திருநாமமாய்த்து.

## குலசேகரப்பெருமாள் கைங்கர்யம்

கல்யப்3த3ம் ஐம்பது வருஷத்துக்குமேல் குலஶேக2ரப் பெருமாள், சேர சோழ பாண்டிய மண்ட3லங்களுக்கு ப்ரபு4வாய், உறையூர், மதுரை, கொல்லிநகர்களிலே திருமாளிகை கட்டி ராஜ்யப4ாரம் பண்ணுகிற காலத்திலே, நீளாம்ஸையான தம்முடைய புத்ரி சோழவல்லியை அழகிய மணவாளப்பெருமாளுக்குத் திருமணம் புணர்ப்பித்து, தம்முடைய த4நத்தையும் ஸ்த்ரீத4னமாகப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, மூன்றும் ஆவரணத்தின் தென்மேற்கிலே சேனைவென்றான் திருமண்டபமும் கட்டி, அந்தத் திருச்சுற்று ஜீர்ணோத்3தா4ரணம் பண்ணுகையில், அந்தத் திருவீதிக்கு **குலசேகரன் திருவீதி** என்று திருநாமமாய்த்து.

## ஆரியபட்டாள்வாசல்

அதன்பின்பு, கல்யப்3த3ம் முந்நூற்றறுபது வருஷத்துக்குமேல், வடக்கேயிருந்து கௌ3ட3தே3ஶத்துக்கு ப்ரபு4வானவன், அநேகம் ஸேனையுடனே ப3ஹுத்3ரவ்யத்தை

துலாபுருஷம் தூக்கிக்கொண்டுவந்து பெருமாளுக்கு ஸமர்ப்பிக்குமிடத்தில், அந்த த்₃ரவ்யத்தை அங்கீ₃காரம் பண்ணுமல் பூ₃ஹூ நாள் வெளியிலே கிடக்க; அதுக்குக் காவலாகவும் தன் மநுஷ்யர்களைக் கோவில் வாசலிலே காவலாகவிருக்கவும், ஆரியதே₃ஶத்தில் ப்₃ராஹ்மணரை வைத்துப்போன படியிஞலே, அந்த ப்₃ராஹ்மணர் பெருமாள் திருவுள்ளமிரங்கும்படி நடந்துகொண்டபடியிஞலே பெருமாளும் அவர்களைக் கடாக்ஷித்துத் திருப்பவளம் திறந்து வார்த்தையருளிச்செய்து, அவர்களுக்காக ப்ரபு₄வை அநுக்₃ரஹித்து, கோயிலிலும் புறப்பட்டருளும்போதெல்லாம் மூன்றும் வாசலிலே தாம் அவர்களுக்கு அர்ச்சாவதார மர்யாதை₃யை அளித்துத் திருப்பவளம் திறந்து வார்த்தையருளும்படி:— **'அருளப்பாடு செம்பொன்மாளிகை திருவரங்கேசனுர் திருவாய் மலர்ந்தருளித் திருகூறுசெய்வார்'.** அவர்களுக்காக அந்த வகுப்பான கௌட₃தே₃ஶாதி₄பதிக்கும் **'அருளப்பாடு செம்பொன்மாளிகை யருள்செய்தார்'** என்று சாதித்தெழுந்தருளுவர். அதுமுதலாக அந்தத் திருவாசலுக்கு ஆரிய பட்டாள் வாசல் என்று திருநாமமாய்த்து.

## திருமங்கையாழ்வார் ப்ரபாவம்

கல்யப்₃த₃ம் நானூற்றுநாற்பத்தஞ்சு வருஷத்துக்குமேல் (ஆழ்வார்) திருமங்கையாழ்வார் தினம் திருவரங்கந் திருப்பதியிலே நித்யவாஸம் பண்ணிக்கொண்டு திருமொழி முதலான ப்ரப₃ந்த₄ங்களையும் அருளிச்செய்துகொண்டு பல திருப்பணிகளையும் பண்ணிக்கொண்டு எழுந்தருளும் காலத்திலே, திருவிளக்குப் பிச்சனைப் பெருமாள் கடாக்ஷித்து, அவனுடனே நித்யமாக வினவியருளும் காலத்திலே, ஒருநாள் திருவிளக்குப் பிச்சனைச் சேதி கேட்டருள, பிச்சனும் திருமங்கைமன்னன் விஷயமாக, 'ப்ரப₃ந்த₄முக₂த்தாலே தேவரைப்பாட நினைத்துத் தன்னைத்தானே துதித்தான்' என்று விண்ணப்பஞ்செய்யக் கேட்டருளி, 'திருமங்கை மன்னன் சேதியை நினைக்கவேண்டாம்' என்று நியமித்து,

ஆழ்வாரிடத்திலே மிகவும் கிருபையுடனே எழுந்தருளியிருக்கும் காலத்திலே; மதுரகவியாழ்வார், திருநகரியிலே ஶடகோபனை அர்ச்சாவிக்ரஹமாக ப்ரதிஷ்டிப்பித்து, கம்பனையும் ஆழ்வார் ஸூக்தியாலே * சங்கப்பலகையிலே ப்ரத்யக்ஷமாக ஜயித்து, ஆழ்வாருக்கும் அனைத்தழகு கொண்டருளப் பண்ணிக்கொண்டு, திருவரங்கந் திருப்பதியிலே அடிக்கடி வந்து ஸ்ரீகார்யம் ஆராய்ந்துகொண்டிருக்கிற காலத்திலே; ஒரு திருக்கார்த்திகை திவ்ய மஹோத்ஸவத்திலே பெருமாளும் நாய்ச்சிமார்களும் திருமஞ்சனம் கண்டருளி, உடுத்துப் பூசி முடித்து ஒப்பித்திருக்க; திருமங்கையாழ்வாரும் 'திருநெடுந்தாண்டகம்' என்று ஆறு ப்ரபந்தத்தையிட்டருளி, பெருமாள் திருச்செவி சாத்தும்படி தேவகானத்திலே ஏறிட்டு அபிநயித்து அநுஸந்திக்க—பெருமாளும் போரவுகந்தருளி, ஆழ்வாருக்கு ஸகலவரிசைகளும் சாதிக்கத் திருவுள்ளம்பற்றி, 'ஆழ்வார்! நாமுமக்குச் செய்ய வேண்டுவதென்?' என்று சொல்ல; திருமங்கைமன்னனும், 'நாயன்தே! ஸம்ஸாரியாய்ப்போந்த அடியேனை இப்படி விஷயீகரித்தபின்பு அடியேனுக்கு ஒரு குறையுமில்லை; ஆகிலும், / மார்கழி மாசத்திலே ஶுக்லபக்ஷத்தில் ஏகாதசியினன்று அத்யயனோத்ஸவம் கொண்டருளும்போது ஶடகோபன் சொல்லான திருவாய்மொழியை வேதங்களுடனே கேட்டருளி, வேதஸாம்யமாக அநுக்ரஹித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய; பெருமாளும் மிகவும உகந்தருளி, அப்பொழுதே ஶடகோபன் திருவாய்மொழிக்கு வேதஸாம்யம் அநுக்ரஹித்து, 'அத்யயனோத்

---

* நம்மாழ்வார் பெருமையைக்கண்டு சங்கத்தலைவர் பாடிய செய்யுள்:—

ஈயாடுவதோ கெருடற்கெதிரே? இரவிக்கெதிர் மின்மினியாடுவதோ?
நாயோடுவதோ வுறுப்புலிமுன்? நரி கேசரிமுன் நடையாடுவதோ?
பேயாடுவதோ வழகூர்வசிமுன்? பெருமானடிசேர் வகுளாபரணன்
ஓராயிரமாமறையின் தமிழின் ஒருசொற்பொருமோ வுலகிற்கவியே.

/ இந்த விருத்தாந்தத்தை பெரியவாச்சான்பிள்ளையின் ''கலியனருள் பாடு'' என்னும் க்ரந்தத்தில் பரக்கக் காணலாம்.

ஸவத்திலே வேதங்களுடனே திருவாய்மொழியும் கேட்டருளுகிறதாகத் திருவுள்ளமானோம்' என்று திருமுகப் பட்டயமும் ஸகலவரிசைகளையும் நம் § தழையிடுவான் கையிலே அனுப்பியருள; 'இக்கலியன் தேவகானத்தினாலே மிகவும் பாடுகையாலே அவர் மிடறுநொந்தது; இன்று நாம் சாத்தியிருந்த தைலக்காப்பை அவர் மிடற்றிலே தடவுங்கோள்' என்று பரிஜநங்களை நியமிக்க; பரிகரமும் அப்படியே செய்ய; திருமங்கைமன்னன் க்ருதார்த்தராய், தம்மிடத்துக்கு எழுந்தருளினார். § தழையிடுவானும் திருமுகப்பட்டையம் முதலான ப்ரஸாதங்களையும் கொண்டுவருகிற சேதியைக் கேட்டு ஶடகோபனும், மதுரகவிகளுடனே புறப்பட்டருளி, §தழையிடுவாரையெதிர் கொண்டு ப்ரஸாதமும்கூடித் திருமுகப்பட்டையத்தையும் ஶிரஸாவஹித்துத் தழையிடுவாரை ஆதரித்து, மறுநாள் திருநகரியிலும் புறப்பட்டு மார்க்கஶீர்ஷமாஸத்து சுக்ல தஶமியினன்று கோயில்வர எழுந்தருள; அச்சேதியைக் கேட்டுத் திருமங்கைமன்னனும எதிர்கொண்டு ஆழ்வாரை ஸேவித்து, மதுரகவிகளுடனே பெரியபெருமாள் ஸந்நிதியிலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவர, பெருமாளும் ஆழ்வாரைக் கடாக்ஷித்து '**நம்மாழ்வார்**' என்று திருநாமம் சாத்தி, ஸகலவரிசையும் ப்ரஸாதித்து. ஸந்த்யாமடமான திருக்குறளப்பன் கோயிலிலே விடுதியாக விடச்சொல்லி நியமிக்க, அந்தப்படியே திருமங்கைமன்னனும் மதுரகவிகளும், பரிஜநங்களுடன் ஆழ்வாரைத் திருக்குறளப்பன் ஸந்நிதியிலே எழுந்தருளப் பண்ணிக்கொண்டுபோய், மற்றைநாள் விடிவோறே திருவத்யயந உத்ஸவம் ஆரம்பித்து வேதாதிகள் தொடங்கி நடந்தவநந்தரம், ராத்ரி அழகியமணவாளன் திருமண்டபத்தில் ஆழ்வார் எழுந்தருள, பெருமாளும் '**அருளப்பாடு திருவாய்மொழி விண்ணப்பம் செய்வார்**' என்று அருளப்பாடு முதலான ஸகல வரிசைகளும் ஸாதிக்க, மதுரகவிகளும் ஆழ்வாருக்குக் கரண

---

§ தழையிடுவான் - திருப்பணிசெய்வான்.

பூ₄தராயிருந்து, திருவாய்மொழியைத் தொடங்கி, தே₃வ க₃ாநத்தினுலே அபி₄நயத்துடனே ஸேவித்து, பத்தாம் திருநாளில் வேத₃ாதி₃கள் சாற்றினவுடனே, ராத்ரி திருவாய் மொழியும் சாற்றி, ஆழ்வார்முன்பு திருவாய்மொழியைத் தலைக்கட்டினவாறே திருவடிகளைச் சேர்ந்தபடியை அநு கரித்து, பெருமாள் திருவடிகளைச் சார்ந்தவுடனே பெரு மாளும் ஆழ்வாரை ஏகாஸநத்திலே வைத்துக்கொண்டு, திருமாலைகள், ப்ரஸாத₃ம், கஸ்தூரித் திருமண்காப்பு முத லான அனைத்துகளை ப்ரஸாதி₃த்துத் திருநகரிக்கு விடை சாதித்து, தம்முடைய வரிசைகளெல்லாம் சாதித்து அனுப் பியருள; நம்மாழ்வார் உடனே, கலியன் பின்செல்ல, மது₄ரகவிகளுடன் புறப்பட்டருளி, திருநகரிக்கு எழுந்தருளி, ப்ரதிஸம்வத்ஸரம் இந்தப் பிரகாரம் நடக்க; திருமங்கை மன்னனுக்குமாக த₃ர்மஙை ப்ரப₃ந்த₄ம் அருளினதினுலே, ஷட்கைங்கர்யமும் செய்தருளுவதாக, ராஜமகேந்திரன் திருவீதியில் வடகிழக்கிலே நூற்றுக்கால் மண்டபமாகத் திருமாமணி மண்டபம் கட்டி, அதிலே பிரதிஸம்வத்ஸரமும் அத்₄யயநோத்ஸவம் நடத்தி, குலசேகரன் திருவீதியைச் சூழ்ந்த திருமதிளும் அதுக்குத் தெற்கு வடக்கு திருவாசல் கோபுரங்களும், அத்திருவீதியில் தென்மேல்மூலைத் திரு மண்டபமும் திருநடைமாளிகையும், தென்கிழக்கிலே பெரிய திருமடைப்பள்ளியும், நாலாந்திருச்சுற்றைச்சூழ்ந்த திரு மதிளும், அதில் தெற்கு வடக்குக் கோபுரங்களும் கட்டி வைக்குமிடத்தில் வடக்குத் திருகோபுரத்திலே எடுத்தகை அழகிய சிங்கநயினுர் ஸாந்நித்₄யம் செய்தருளினபடியினுலே அவருக்கு எடுத்துக்கட்டியும் ஸ்தூபியும் கட்டிவைத்து, அதுக்குக் கிழக்கே சந்திரபுஷ்கரிணிக்கரையிலே தொண் டரடிப்பொடியாழ்வார் திருமாலைப்பலகையிருக்கிறபடியி னுலே அத்தைவிட்டு மதிள்கட்டுகையாலே ஆழ்வாரும் ஸந்துஷ்டராய், தம்முடைய கையில் திருத்துகிற ஆயுத₄த் துக்கு க்ருதஜ்ஞதையினுலே "அருள்மாரி" என்று ஆழ்வார்

திருநாமம் சாத்தினதைக் கண்டு களித்து; பூர்வம் தென் மேல்புறத்திலே நிசுளாபுரியான உறையூருக்கு ப்ரபு₄ வானவன் சோழன் ராஜ்யப₄ாரம் வஹிக்கச்செய்தே, திருக் காவேரிக் கரையிலே தாமரை ஓடையில் தாமரைப்பூவிலே ஒரு கன்னிகா ஶிஶுவைக் கண்டு எடுத்துக்கொண்டுவந்து ஸ்வஸ்த்ரீயின் கையிலே கொடுத்து "கமலவல்லி" என்று திருநாமஞ் சாத்தி, வளர்ந்தவுடனே ஸ்ரீரங்க₃ராஜர் திருக் கல்யாணம் செய்தருளி "அழகியமணவாளர்" என்கிற திருநாமம் பெற்றபின்பு, அந்த நந்த₃சோழனும் தன் குமாரத் தியான உறையூர் வல்லியாருக்கு ஸ்த்ரீத₄நமாக ப₃ஹு த்₃ரவ்யத்தைத் தங்கத்தாலே ஒருநாளையில் படித்தனமாக முந்நூற்றறுபதின்கலம் அமுதுபடி முதலான ஸாமக்₃ரி களும் ததிகளும் கொடுத்து, நாலாம்சுற்றுத் தென்மேல் மூலையிலே * கருவுகலம் கட்டிவைத்து, அதிலே வந்த பதா₃ர்த்த₂ங்களை க்ஷேமித்துவைத்து. அந்தக் கருவுகலத்துக்கு வடக்கு – வடக்குத் திருக்கொட்டாரமும், தெற்கு வடக்காகப் பெரிய திருநடைமாளிகையும் கட்டிவைக்கும் காலத்திலே; ஒருகால் பெருமாள், மஞ்சனக்குளி உத்ஸவத்துக்கெழுந் தருளக்கூடாமல், பரிஜநங்களுக்கு அருளப்பாடிட்டு, "நம் கலியனை மஞ்சனக்குளி உத்ஸவம் பண்ணிவைத்துக் கொண்டு வாருங்கோள்" என்று திருவுள்ளமாக; அந்தப் படியே நடத்தினபின்பு, அதுமுதலாக ப்ரதிஸம்வத்ஸரம் அந்த உத்ஸவம் திருமங்கைமன்னனுக்கே நடந்துவர, திருமங்கைமன்னனும், சந்த்₃ரபுஷ்கரிணிக்கரை தொடங்கி வெளியழகியானிலும் திருநடைமாளிகை கட்டிவைத்து, தளவரிசையும்பண்ணி மிதிக்கையில், திருவீதி **"ஆலிநாடன் திருவீதி"** என்று திருநாமமாய்த்து.

## சோளேந்திரஸிம்ஹன் கைங்கர்யம்

அத்திருவீதியில் சந்த்₃ரபுஷ்கரிணிக்குக் கிழக்கு சோளேந்திரஸிம்ஹன் கைங்கர்யமான திருமண்டபம்.

* கருவுகலம் - சரக்கறை; நற்சரக்கையிட்டுவைக்கும் அறை; ஸ்ரீ ப₄ண்டா₃ரமென்றபடி.

## கங்கைதேவர் சிங்கணன் தண்டநாயக்கர் கைங்கர்யம்

ஆரோக்₃யசாலையும், திருநடைமாளிகையும், ப்ரதாப சர்க்ரவர்த்தி கார்யப்பேரில் **கங்கைதேவர் சிங்கணன்** தண்டநாயக்கர் கைங்கரியம்.

## விக்ரமசோழனுன அகளங்கன் கைங்கர்யம்

அத்தைச் சூழ்ந்த **அஞ்சாம் திருச்சுற்றுத்திருமதிளும்,** அதில் நாலுகோபுரமும், திருவாசலும், வடகிழக்கிலே கோ₃சாலையும், அதில் குழகர் ஸந்நிதி₄யும், தத்ப்ரதிஷ்ட்டை₂யும், தென்மேற்கிலே விமாநத்துடன் கோவிலும், அதிலே **சக்கரவர்த்தித்** திருமகன் ப்ரதிஷ்ட்டை₂யும், வடமேற்கில் நாச்சியார்கோவிலும், ஆலிநாடன் திருவீதியில் பெரிய **திரு**மண்டபத்தில் பெரியதிருவடியும், அத்திருமண்டபத்தில் **அ**டிப்பாரமும், குறடும் கட்டுவித்தது, விக்ரம சோழனுன **அகளங்கன்** கைங்கர்யம்.

## சுந்தரபாண்டியதேவர் கைங்கர்யம்

**சுந்த₃ர**பாண்டிய**தே**வர், சேரன் சோழன் வல்லாளன் **தேவன் முதலானுரை ஜயித்து** "எம்மண்டலங் கொண்ட பெருமாள்" என்று விருது செலுத்தி, அந்த த்₃ரவ்யங்க ளாலே **ராஜமஹேந்த்ரன் திருவீதி** முதலாக இந்நாலு வீதி யும் இருபத்துநாலு துலாபுருஷமண்டபங்கட்டி துலாப₄ாரந் தூக்கி, திருமுகத்துறையிலே ஒருநிறையாக இரண்டு ஓடங் கட்டி, அதில் ஒரு ஓடத்திலே தச்சுமுழத்திலே ஏழுமுழ மிருக்கிற பட்டத்தானையின் மேலே தானும் தன்னுடைய ஆயுத₄ங்களுடனேயிருந்து, ஒரு ஓடத்திலே அந்த மட்டத் துக்குச் சரியாக ஸ்வர்ணம் முத்து முதலான நவரத்நங் களும் ஏற்றி, ஆனை துலாபுருஷந்தூக்கி, இது நீங்கலாக வேறே த₄னங்கள் அழைப்பித்து, கல்போகதப்ரகாரம் தா₃னத₄ர்மங்களும் பண்ணிவைத்து, அந்த த்₃ரவ்யத்தை கைங்கர்யம்பண்ண உத்₃யோகி₃க்குமளவில்; அந்த த்₃ரவ்யம், ஸபரிகரரான ஸ்வாமிக்குத் திருவுள்ளமாகாத

படியினாலே இரண்டு வருஷம் மறிபட்டுக் கிடந்தது; அநந்தரம், அவனுடைய ஆர்த்தியாலேயும் அனுஸரணத்தினாலேயும் ஸபரிகரரான பெருமாள் திருவுள்ளமான வநந்தரம் அந்த த்₃ரவ்யத்தைக் கருவுகலத்திலே முதலிட்டுப்பண்ணின கைங்கர்யத்துக்கு விவரம்:—

திருவணுக்கன் திருவாசல் திருமதிளுக்கு மேலே சூழச் சூழ்ச்சியாக எடுத்துக் கட்டுவித்து, திருவணுக்கன் திருவாசலுக்கும் த₄ர்மவர்மாவின் கைங்கர்யமான அழகிய மணவாளன் திருமண்டபத்துக்கும் நடுவிலே ஒரு பத்தி வெளியாய் திருவணுக்கன் திருவாசலிலே சுருளும் படியும் கட்டியிருக்கையில், அந்த வெளியை அந்தத் திருமண்டபத்துடனே சேர்த்துப் பாவுகல்லும் போட்டு வெளியையடைத்து, நடுவில் பள்ளமும் துற்பித்து, தளவரிசையும் கட்டுவித்து, மேல்புறமும் கீழ்ப்புறமும் சுருளும் படியும் கட்டுவித்து, அந்தத் திருமண்டபத்துக்குத் தெற்கு பெரிய திருவடி ஸந்நிதி₄க்குக் கிழக்கும் மேற்கும் கல்லறைகளைக் கட்டுவித்து, மேல்புறம் வெளியையடைப்பித்து, சேனை முதலியார் திருச்சுற்றான ராஜமஹேந்த்ரன் திருவீதியில் தெற்குத் திருவாசல் முதலாக, சுற்றுத்திருநடை மாளிகைகளும், துலாபுருஷமண்டபங்களும், திருப்பூமண்டபமும், யாக₃சாலையும், வடக்குத் திருவாசலுக்குக் கிழக்கு முதலாகத் திருநடைமாளிகைகளும், துலாபுருஷமண்டபங்களும், அழகிய மணவாளன் திருமண்டபத்துக்கு நேர்கிழக்காக திருவீதிக்குக் கீழ்புறத்திலே கொறட்டின்மேலே திருக்காவணப்பத்தித் திருமண்டபமும், சுந்தரபாண்டியதேவர் காரியப்பேரில், பாண்டிமண்டலத்தில் பல்லவன் விழுப்பரையன் கரியமாணிக்கத்தின் கைங்கர்யம்.

## எம்மண்டலங்கொண்டு கோயில் பொன்மேய்ந்த பெருமாள் சுந்தரபாண்டியதேவர் கைங்கர்யம்

இம்மூன்றும் திருச்சுற்றான குலசேகரன் திருவீதியில் ஆர்யப₄ட்டாள் காவலான தெற்குத் திருவாசலுக்கு மேற்கு.

சேனை வென்றான் திருமண்டபத்துக்கு மேற்குத் துலாபுருஷ மண்டபமும், அந்தத் திருவாசலுக்குக் கிழக்குத் துலா புருஷமண்டபமும், வடக்கு திருவாசலுக்குக் கிழக்குத் துலா புருஷமண்டபமும், முன் கம்பர் தண்டயநாயக்காதி₄காரியாய் ஆயிரக்கால் மண்டபம் கட்டிவைத்த பெருமாள்தேவன் கைங்கர்யமான சுற்றுச்சூழ்ந்த திருக்காவணமுள்பட பெரு மாள் தேவன் திருமண்டபத்தை அறைகுறையும் தீர்த்துக் கொண்டு, திருநாளும் சுந்தரபாண்டியன் கட்டளையாக நடந்தது. இதுவும், இத்திருச்சுற்றில் தளவரிசையும், திருநடைமாளிகை திருமண்டபமும், நாலாந்திருச்சுற்றான வெளியழகியானில் திருநடைமாளிகையில் துலாபுருஷ மண்டபங்களும் கட்டிவைத்து, தன்னை விக்₃ரஹமாகப் பண்ணுவிக்கிறதுக்கு பெருமாள் பரிகரங்கள் சம்மதியாத படியினாலே தன்பேரிலே ‘பொன்மேய்ந்த பெருமாள்’ என்று ப₄க₃வத்₃விக்₃ரஹமும், அழகியமணவாளன் திருமன்டபத் தில் பெரியதிருவடிநயினாரையும், நீளாம்சையான சேர குலவல்லியாரையும் தங்கத்தாலே ஏறியருளப்பண்ணி வைத்து, சந்தனமண்டபத்தில் பெரியதிருவடி ஸந்நிதி₄க்கு அடுத்தாப்போலே கீழ்ப்புறத்தில் கல்லறையில் பொன் மேய்ந்த பெருமாளையும், திருப்பூமண்டபத்தில் தென்புறத் தறையிலே சேரகுலவல்லியாரையும் ப்ரதிஷ்ட்டி₂ப்பித்து, பெரியபெருமாளுக்கும் அழகிய மணவாளப்பெருமாளுக்கும் ரத்நதிருவபி₄ஷேகங்களும், ரத்நாங்கி₃களும், திருவனந்தாழ் வானுக்கு ரத்நாங்கி₃யும், பெரியபெருமாளுக்கு மாணிக்கத் திருவபி₄ஷேகமும், வயிரத்திருவபி₄ஷேகமும், ரத்ந அங்கி₃, ரத்நதிருப்பாகையும், மாணிக்கமாலை, கமலப்ரமாணம் கண்ட₃மாலை, ஸ்வர்ணச் செண்பகமாலை, ரத்நக்கமுநீர்மாலை களும், பலவகைத் திருவாப₄ரணங்களும், பொன்னாலே உத்தரீயமும், கோவிலாழ்வாரும், விமானமும், பொன்னின் மேலே முத்துக்கட்டின ரத்நப்ரபை₄ ஸிம்ஹாஸநமும், திருமுத்தின் பந்தலும், செம்பொன் திருவாசலும், அமுது மண்டபமும், திருவண்ணாழி திருமதிள்கள் முதலானவை

களும், பொன் தகடுபோட்ட திருவணுக்கன் திருவாசலும், கல்தோரணமும், ரத்நத்தாலே பண்ணுவித்து; அழகிய மணவாளன் திருமண்டபமும், பெரியதிருவடி விமாநமும், திருக்கோபுரநயினார் விமானமும், ராஜமகேந்திரன் திருவீதியும், மதிள் கொடுங்கை தூண் முதலானவைகளும், பொன் தகடு போடுவித்து, குலசேகரன் திருவீதியும் அந்தந்தப் படியே பொன்செய்வித்து, அணியரங்கன் திருமுற்றத்திலே கொடிக்கம்பம் பொன்னாலே நாட்டுவித்து, இதுவும் தங்கக்கொப்பரைகளும், தங்கத்தளிகைகளும், வட்டில் வேதிகை திருக்குத்துப் பணிவிளக்கு திருமஞ்சனத்தாழி திருமஞ்சனக்கொடிகளும் பண்ணுவித்து, மேற்படியார் திருநாளான சித்திரைத் திருநாளுக்குத் திருக்காவேரியிலே பெரியதாக ஊறணி வெட்டுவித்து, அதுக்குத் திருக்காவேரி நீர் பாய்ச்சி, முத்தும் பவளமும் கட்டின திருக்காவணமும் கட்டுவித்து, ஊறணியிலே திருப்பள்ள ஓடம் பொன்னாலேபண்ணி நிறுத்தி, அதிலே நாய்ச்சிமார்களுடனே பெருமாளெழுந்தருளிச் சிறப்புக் கட்டளையும் பண்ணி, ஒருநாள் படித்தனமாக முந்நூற்று அறுபதின்கல அமுதுபடியும், பொன்னாலே கொம்பஞ்சு கொடியஞ்சு கறியமுது வகைகளும், அதுக்குத்தக்கதாகப் பண்ணுவித்து, வடக்குமாடத் திருவீதியில் திருத்தேர் திருநாள் மேற்படியார் கைங்கர்யமாக நடக்கையாலே அந்தத் திருத்தேரிலே ஸிம்ஹாஸநத்தளவாக முகபத்ரத்துக்குப் பொன்தகடும், பொன்னாலே பெரியதிருவடி குதிரைநம்பிரான் ஆனைநம்பிரான் இருந்த பீடமும் சேனைவென்றான் திருச்சுற்றிலே எழுந்தருளும்படி செம்பொன் திருத்தேரும் கட்டுவித்தது. ஆக, நடைப்பொன் பதினெட்டு லக்ஷமும், கோயில் பொன் மேய்ந்தது பதினெட்டு லக்ஷமும், எம்மண்டலங்கொண்டு கோயில் பொன்மேய்ந்த பெருமாள் சுந்தரபாண்டியதேவர் கைங்கர்யம்.

## குலோத்துங்கசோழன் கைங்கர்யம்

பெருமாள்தேவன் மண்டபத்துக்குக் கிழக்கு நாலு காலிலே ராமலக்ஷ்மண ஸுக்ரீவ ஹநுமாருடன்கூடின நாலுகால் மண்டபமும், குலோத்துங்கசோழன் கைங்கர்யம்.

## கம்பயதண்டயநாயக்கர் கைங்கர்யம்

ஆலிநாடன் திருவீதி மேல்வடக்குமூலை பரவாசுதேவர் ஸந்நிதியும், அகளங்கன் திருவீதியில் மேல்புறத்து ஸுதர்ஶநப் பெருமாள் கோவிலும், நாய்ச்சியார் ஸந்நிதி, மண்டபமும், இந்தத் திருச்சுற்றிலே ஆயிரக்கால் மண்டபமும், வடகிழக்கில் கோஶாலையையழித்து கௌத்தியாகக் கட்டின கொறட்டின்மேலே பத்திக்கொறடும் கட்டி, லக்ஷ்மீநாராயணப் பெருமாள் கோயிலும், இவர் ஸந்நிதிக்குத் தெற்கு நாயகப்பத்தியும், தேவராஜன் கொறட்டுப்பத்தியும், சூனையறு கணி வெளிக்கும் படிக்கு மடுத்த மதிளும், பட்டத்துயானை பூண்ட புரவியில் குறடும், குதிரை பூண்ட புரவியில் குறடும், சுருளும் படியும், மேல்கொடுங்கையும் கட்டிவைத்தது, வள்ளாளதேவன் வகையில் ப்ரதாபசக்ரவர்த்தி ராமனுக தேவனுடைய ப்ரதாநி கம்பயதண்டயநாயக்கர் கைங்கர்யம்.

திருவாழியாழ்வான் கோயில்வாசல் நாலுகால் மண்டபம், கம்பயதண்டயநாயக்கர் கைங்கர்யம்.

## கரியமாணிக்கத்தண்டயநாயக்கர் கைங்கர்யம்

அதுவும், இதுக்குக்கீழில் திருக்காவணப்பத்தியும், நாயகபத்தியும், கொறட்டில் சித்திரப்பணியும், தேவாஸநமும், படியும், மேலில் கொடுங்கையுட்படக் கட்டுவித்தது, கம்பயதண்டயநாயக்கர் தமையனார் கரியமாணிக்கத் தண்டயநாயக்கர் கைங்கர்யம்.

## மலைப்பெருமாள் கைங்கர்யம்

எடுத்தகை அழகியநயினார் கோவிலுக்கு விவரம்:— திருமங்கையாழ்வார், ஆலிநாடன் திருவீதியில் வடக்குத்

திருக்கோபுரத்திலே எடுத்தகை. அழகியநயினர் ஏறியருளப் பண்ணினவிடத்திலே அவர் ஸாந்நித்₄யம் செய்தருளின படியினலே, மலையாள ராசாவான சேரன், எடுத்துக் கட்டியும் விமாநமும் கட்டுவித்தார்; அநந்தரம், முன்னடிப் பாரமுள்ளது, மலைப்பெருமாள் கைங்கர்யம்.

## வீரநரசிங்கதேவர் கைங்கர்யம்

இதில், திருமண்டபமும், மேலெடுத்துக்கட்டியும், மதிளும், கன்னடியராசா வீரநரசிங்கதேவர் கைங்கர்யம்.

## ஆகுளூர் வரநாதராயர் கைங்கர்யம்

இந்தக் கோயில் முகப்புக்கொறடு திருமண்டபமும், சுருளும் படியும், ஆளூர் வரநாதராயர் கைங்கர்யம். இந்தக் கோயில் திருமடைப்பள்ளியும், அவர் கைங்கர்யம்.

## தேவப்பெருமாள் கைங்கர்யம்

இதுக்கு வடக்கு அகளங்கன்வாசல் நிலைகாலும், வட புறத்தில் திருமதிளும் பழகிச்சரிந்துபோகையில், நிலைகாலும் நிறுத்தித் திருமதிளும் கட்டிவைத்தது—ஆகுளூர் வரநாத ராயர் குமாரர் தேவப்பெருமாள் கைங்கர்யம்.

## வாலநாதராயர் கைங்கர்யம்

பெரிய திருமண்டபத்தில் பெரியதிருவடி கோயில் சூழ்ந்த பரமன்மண்டபம், ஆகுளூர் வரநாதராயர் ராஜ்யம் பண்ணின காலத்தில் தச்சன் பரமனைக்கொண்டு நாலு புறத்திலும் நாலாணி நாலோட்டுக்காலும், எட்டு கும்ப சரக்காலுட்பட்டது நேர்த்தியாகப் பண்ணுவித்து, பெரிய திருவடி மண்டபமும் கட்டுவித்து, **பரமன் மண்டபம்** என்று பேரிடுவித்தது, வாலநாதராயர் கைங்கர்யம்.

## திருவிக்கிரமசோழன் கைங்கர்யம்

இந்த அகளங்கன்திருமதிளைச் சூழ்ந்த திங்களும் விழாவருத திருவீதியைச்சூழ்ந்த திருமதிளும், நாலு திருக்

கோபுரங்களும் திருவிக்கிரமசோழன் கைங்கர்யமாகை யாலே, இத்திருவீதிக்கு திருவிக்கிரமன் திருவீதி என்று திருநாமமாய்த்து.

## பள்ளிகொண்டசோழன் கைங்கர்யம்

இதில் கீழ் மாடத்திருவீதியிலே பாடுவார் திருமாளிகை வாசலிலேயிருந்து பெருமாள் ஆயிரக்கால் திருமண்டபத்தின் மேலே கொடை கண்டருளும்போது, இசை சேவிப்பார்கள். தெற்குமாடத் திருவீதியிலே கீழ்க்கண்டத்திலே பல்லவ ராயன் மடமும், வடக்குமாடத் திருவீதியிலே மேல்கண்டத் திலே இலங்கேசுவரன் மடமும், திருத்தேர் கீழ்க்கண்டத் திலே சேரன்மடமும், அதுக்குக் கிழக்கே மண்டபமும், மடமும், அவர்கள் ததீ₃யாராத₄நமும் நடந்தது. அத்தைச் சூழ்ந்த மாடமாளிகைசூழ் திருவீதி திருமதிள் நாலு திருக் கோபுரவாசலும், பள்ளிகொண்டசோழன் கைங்கர்யம்.

## கலியுகராமன் கைங்கர்யம்

அந்தத் திருவீதியில் வடவண்டை மேல்கண்டத்திலே, திருமங்கையாழ்வார் மடமும் கட்டிவைத்தார்; மற்றும் அநேக மடங்களுமுண்டு. ஆக, திருவீதிகளெழுந்தது வரையிலே அவரவர் பண்ணின் ஜீர்ணோத்தாரணத்தினலே அவரவர் பேர் வழியிலே வ்யவஹாரம் நடந்துசெல்லுகிறது; அத்தைச் சூழ்ந்த திருவீதி கலியுகராமன் கைங்கர்யம்.

## திருக்குறளப்பன் ஸந்நிதி

சுற்றுக்கோவில்களில் திருக்குறளப்பன்கோயில், அநாதி யாய், தென் திருக்காவேரிக்கு வடகரையாய், ஸந்த்₄யா மட₂மாயிருந்தது. கல்யப்₃த₃ம் நானூற்று நாற்பத்தஞ்சுக்கு மேல், மது₄ரகவியாழ்வார் நம்மாழ்வாரைத் திருநகரியிலும் பெருமாள் நியமநத்தினலே எழுந்தருளப் பண்ணுவித்துக் கொண்டுவர, பெருமாளும் நம்மாழ்வாருக்கு ஸந்த்₄யா மட₂த்தை விடுதியாக ஸாதித்தருளினபடியினலே, அது

முதலாக, திருக்குறளப்பன் ஸந்நிதி₄யிலே நம்மாழ்வார் எழுந்தருளியிருக்கிறார். திருக்குறளப்பன் புராண ஸித்₃த₄ம்.

## வல்லபதேவன் கைங்கர்யம்

கல்யப்₃த₃ம் நூற்றஞ்சுக்குமேல், ஸ்ரீவில்லிபுத்தூரிலே அழகியமணவாளன் ரங்கமன்னாராக எழுந்தருளி, சூடிக்கொடுத்த கோதையைத் திருமணம் புணர்ந்து, நாய்ச்சியாருடன் கோவிலுக்கெழுந்தருளும்போது, பெரியாழ்வார் சிஷ்யனான வல்லபதேவன் கோதைக்கு ஸ்த்ரீத₄நம் அநேகமாகக் கொடுத்து, திருப்பல்லக்கிலே சூடிக்கொடுத்தவளையும் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு, தென் திருக்காவேரி வடகரையிலேயிறங்கி நீராட்டம் முதலான அலங்காராதி₃களைப் பண்ணிக்கொண்டு, அனைவரும் எதிர்கொள்ளத் திருப்பல்லக்குடனே கோயிலிலே புகுந்து அத்₃ருஶ்யையானபடியினாலே, அந்தத் திருத்தோப்பிலே சூடிக்கொடுத்த நாய்ச்சியார் கோயில்கட்டி ப்ரதிஷ்டி₂ப்பித்தது வல்லப₄தேவன் கைங்கர்யம். *(இது வெளி ஆண்டாள் ஸந்நிதி₄ என்று வழங்கிவருகிறது.)

## திருமங்கைமன்னன் கைங்கர்யம்

கல்யப்₃த₃ம் நானூற்றெண்பதுக்குமேல் திருமங்கையாழ்வார் த₃ஶாவதாரக் கோயிலைக்கட்டி ப்ரதிஷ்டி₂ப்பித்து, தம்மையும் விக்₃ரஹமாக மூலோத்ஸவ விக்₃ரஹங்களை ஏறியருளப்பண்ணி ப்ரதிஷ்டி₂ப்பித்து,அதற்கு வடபுறமாகத்₃தாம் வாள்கடைதூரம் நிலங்கொண்டு, ஸ்ரீப₄ண்டா₃ரத்திலே த்₃ரவ்யத்தை முதலிட்டு, **பாடியவாளன்துறை** என்று அதுக்குத் திருநாமம்சாற்றி, அவ்விடத்திலே ஸம்ஸ்க்ருதரான பேருக்கு பரமபத₃முண்டாகத்தக்கதாக அந்த ப்ரதே₃ஶத்துக்கு ஸ்ப்ருஷ்டியில்லாதபடி பெருமாள் ஸந்நிதி₄யிலே வரம்பெற்றபடியினாலே, இவைகள் திருமங்கைமன்னன் கைங்கர்யம். *(இதற்குப் பெயர் திருமங்கைமன்னன் படித்துறை.)

---

* அடைப்பினுள் உள்ளவை சில பிரதிகளிலேயே உள்ளன.

## காட்டழகியசிங்கர்

கிழக்கில் காட்டழகியசிங்கர் புராணஸித்₃த₄ம்.

## சோழன் பிரதிஷ்ட்டை₂

தெய்வப்புள்ளேறி வருவாரும், பலமண்டபப்பெருமாளும், மேல்புறம் அழகிய சிங்கரும், ஆதிகேசவப்பெருமாளும், சோளாதி₄பதி ப்ரதிஷ்ட்டை₂; பன்றியாழ்வானும் சோழன் ப்ரதிஷ்ட்டை₂.

## டில்லீசுவரன் அழகியமணவாளனைக் கொண்டுபோனது

இப்படி திருவரங்கப் பெருநகரிலே பெருமாள் பரிஜனங்களுடன் வாழ்ந்திருக்கிற காலத்திலே, டில்லீசுவரனுடைய துலுக்கன் ப்ரதாபருத்₃ரனை ஜயித்து தொண்டைமண்டலம் சோழமண்டலம், முதலான ப்ரதே₃ஶங்களிலே பரவி முற்றிலும் வ்யாபித்து, திவ்யதேசங்களில் பெருமாள்களையும் எடுத்துக்கொண்டு போமளவில்; திருவரங்கத் திருப்பதியிலேயும் வந்துபுகுந்து, கோயிலிலே ப்ரவேஶித்து, வடக்குவாசலிலே புகுந்து, ஆரியபட்டாள் காவலான வடக்குவாசலிலே புகுரவர; அவ்விடத்திலே **பஞ்சுகொண்டான்** என்கிறவரிருந்து படைபண்ணி அவர்களை நிறுத்த, ப₃ஹுஜநங்களாகையாலே பத்துபேர்விழுந்து பஞ்சுகொண்டானை சரிப்பிடித்து உள்ளே புகுந்து கருவுகலம் முதலானவைகளையும் கொள்ளையிட்டு, அழகியமணவாளப்பெருமாள், சேரகுலவல்லியார் முதலான விக்₃ரஹங்களையும் எடுத்துக் கொண்டு, ஸர்வஸ்வத்தையும் கொண்டுபோகையில்; கரம்பனூரிலே ஒரு அம்மையார் "நித்யமாக அழகிய மணவாளப் பெருமாளை ஸேவியாமல் சாப்பிடுகிறதில்லை" என்று வ்ரதத்தை உடையவளாயிருக்கிறவள், பெருமாளெழுந்தருளினவுடனே உபவாஸத்துடனே, ஸம்ஸாரத்தை விட்டு டில்லீசுவரன் பாளையத்திலே ப்ரவேஶித்து தே₃ஹ த₄ாரணம் பூ₄லாஹாரமாகப் பண்ணிக்கொண்டு அந்தத் துலுக்கனுடனேகூடப் புறப்பட்டு, திருநாராயணபுரத்திலே

ராமப்ரியரையும் கொண்டுபோகிறதைக்கண்டு, டில்லியி லேயும் போய் வேஷத₄ாரியாய் துலுக்கன் வீட்டிலே புகுந்து, பெண்டுகளையும் மருவி, இந்தத் துலுக்கனரண் மனையிலே உக்₃ராணத்திலே வைக்க; அதிலே அழகிய மணவாளப்பெருமாளை அந்த டில்லீசுவரன் குமாரத்தி கண்டு, தனக்கு விளையாட வேண்டுமென்று எடுத்துக் கொண்டு, தன்னுடைய ஶயநக்₃ருஹத்திலே வைத்துக் கொண்டிருக்கையில், அழகியமணவாளப்பெருமாள் திரு மேனிக்கு ஸ(ப₃?)ாத₄கமில்லையென்று அந்த அம்மையார் நிஶ்சயித்து,இந்தச் சேதியை ஸ்த₂லத்திலே அறிவிக்கவேணு மென்று, திருவரங்கந் திருப்பதியேறவந்து அச்சேதியை விண்ணப்பஞ்செய்ய; பெரியபெருமாளும், ஸபா்கரராய்க் கொண்டு மிகவும் உகந்தருளி, அந்த அம்மையாருக்குப் **பின்சென்றவல்லி** என்று திருநாமம்சாற்றி ஸகலவரிசை களும் ப்ரஸாதி₃க்க;

## ஸ்த₂லத்தார் அழகியமணவாளனை எழுந்தருளப்பண்ணிக் கொண்டுவந்தது

அநந்தரம், ஸ்த₂லத்தாரனைவரும் அந்த வ்ருத்தாந்தத் தைக் கேட்டு நன்றாக ஆலோசனைபண்ணி, ஸ்ரீரங்கநாய்ச்சி யாரை வில்வமூலத்தடியிலே எழுந்தருளப்பண்ணி, பெரிய கோயில் திருவணுக்கன் திருவாசலைக் கல்திரைபரிமாறி, கோயிலைப் பாழ்போட்டு, பரிஜநங்களனைவரும் அறுபது திருநாமம் பின்தொடர்ந்தவல்லியை முன்னிட்டுக்கொண்டு டில்லியிலே போக; பின்தொடர்ந்தவல்லியும் முன்புபோலே வேஷத்தை த₄ரித்து வேஷத₄ாரியாய் அரண்மனையிலே புகுந்து, பெண்டுகளை அநுவர்த்தித்து, அழகியமணவாளப் பெருமாள் அந்தத் துலுக்கன் குமாரத்தி ஸ்ரதாரியுடனே பகல் அர்ச்சாவிக்₃ரஹமாயும் ராத்ரி விப₄வாவதாரமாயும் ஸகலஸம்ப்₄ரமத்துடனே விஹரித்துக்கொண்டிருக்கிறபடி யைக் கண்டு, பரிஜநங்களுக்குச் சொல்ல; அவர்களும், பாடுவாரை முன்னிட்டுக்கொண்டு, டில்லீசுவரனைக் கண்டு

ஜக்கிந்திநாட்யத்திஞலே அந்த ப்ரபு₄வை நன்ருக வஶீக ரித்து, டில்லிபதியும் ஸந்தோஷப்பட்டு ப₃ஹூத்₃ரவ்யங்களைக் கொடுக்க; பாடுவாரும், அத்தை வாங்காமல் "நம்முடைய அழகிய மணவாளப் பெருமாளைத் தரவேண்டும்" என்று கேட்க; டில்லீசுவரனும் தன் மனுஷ்யனைக்கூட்டி, "உக்ரா ணத்திலே இவருக்கு வேண்டின விக்₃ரஹத்தை எடுத்துக் கொள்ளட்டும்" என்று உத்தரவுமிட; இவர்களும் உக்ரா ணத்திலே சோதிக்குமளவில், அங்கே அழகியமணவாளப் பெருமாளைக் காணுமையாலே கேவலம் விஷண்ணராய், அந்த அம்மையாரைக் கேட்டுக்கொண்டு, டில்லீசுவர னுடனே, "உங்களுடைய குமாரத்தி எங்கள் பெருமாளை வைத்துக்கொண்டிருக்கிருள்" என்று சொல்லுமிடத்தில்; அவனும் "உங்கள் தெய்வத்தை நீங்களே அழைப்பித்துக் கொள்ளுங்கோள்" என்று சொல்ல; பாடுவானும், தே₃வ கா₃நத்திஞலே அழகியமணவாளப் பெருமாளை நன்ருக ஏத்தி ஆகர்ஷிக்க; பே₄ாக₃சிங்ஹங்களுடனே அந்தப் பெண்ணைத் தூங்கப்பண்ணி தாமெழுந்தருளக்கண்டு, பாடு வாரும் ஸுல்தானுடனே சொல்ல; அவனும் ஆச்சர்யப் பட்டு, "உங்கள் தெய்வத்தைக் கொண்டுபோங்கோள்" என்று உத்தரங்கொடுக்க; அப்பொழுதே பரிஜநங்களை வரும் பெருமாளை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு அதி ஶீக்₄ரமாக அந்த ராத்திரியிலே எண்காதவழி ஓடி வந்தார்கள்.

## ஸுரதாணி பெருமாளைத் தேடிக்காணுமல் சரீரம்விட்டது

மற்றைநாள் விடிவோறே டில்லீசுவரன் பெண் எழுந் திருந்து, பக்கத்திலே பெருமாளைக் காணுமல் திடுக்கென்று விஸநாக்ராந்தையாய் அந்த:புரமெல்லாம் தேடிக் காணுமல், உக்ராணம் முதலான வெளிகளிலும் காணுமல், விரஹத் திஞலே து₃:க்கி₂தையாய், ப்ராணஸம்ஶயம் வந்தவளவிலே; தத்பிதாவான டில்லீசுவரன் இந்தச் சேதியறிந்து, தன் பட்டணத்திலே அந்தப் பரிஜநங்களை விசாரிக்குமளவில்;

அவர்கள் முதல்நாள் ராத்திரியே புறப்பட்டுப்போனார்கள் என்கிற சேதியும் கேட்டு, "அவர்கள் கொண்டுபோகிற விக்ரஹத்தை அழைப்பிக்கிற பர்யந்தம் பெண் தரிக்க மாட்டாள்" என்று அறிந்து, பெண்ணைத்தானே பயணமாக ஸேனைகளையும் கூடக்கூட்டி, வழியிலே கண்டவிடத்திலே விக்ரஹத்தைக் கொண்டுவரச் சொல்லியனுப்ப; இவர்கள் புறப்பட்ட மூன்றும்நாள் ஸேனையுடன் டில்லீசுவரன் புத்ரியான ஸுரதாணியும் புறப்பட்டு, பெருமாளைக் காணுமாசையாலே ப்ராணன் தரித்து, பயணகதியிலே திருவேங்கடத்தின் ஸமீபத்திலே சந்த்ரகிரிபர்யந்தம் வர; பெருமாள் பரிஜநங்களும் அவர்கள் கிட்டின சேதியைக் கேட்டு, "இனி மோசம் வந்தது, நாம் கூடிப்போனோமாகில் அவர்கள் பெருமாளைக் கொண்டுபோவார்கள்; ஆனபடியினாலே அவரவர்கள் தனித்து யதேச்சமாகப் போவோம்" என்று நினைத்து, கொடவர் மூன்று திருநாமம்—மைத்துனனும், மாப்பிள்ளையும், மருமகனுமாக மூன்றுபேரும் பெருமாளை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு திருமலையிலே ஏறினார்கள்; மற்ற அன்பத்தேழு பேரும் தனித்து யதேச்சமாகப் போனார்கள். அந்தத் துலுக்கரும் வழியிலே இவர்களைக் காணமல், பயணகதியிலே திருவரங்கந் திருப்பதியேறச் சென்று, அங்கே பெருமாள் எழுந்தருளாத சேதியையும் கேட்டு, கோயில் திருவாசல் கல்திரையிட்டிருக்கிறபடியும் கண்டவுடனே, டில்லீசுவரன் புத்ரியான ஸுரதாணி, சிந்தயந்தியைப்போல விரஹாதிசயத்தாலே சரீரத்தை விட்டாள்.

## கொடவர் அழகியமணவாளனைக் காத்தது

அதன்பின்பு, வந்த ஸேனை திருமலைபர்யந்தம் போமளவில், அங்கே, பெருமாள் திருமலையேறி எழுந்தருளின சேதிகேட்டு, அந்தத் துலுக்கர் அடிவாரத்திலே யிருந்து கொண்டு ஆளைவிட்டுத் திருமலையெல்லாம் தேடுவிக்குமளவில், பெருமாளுக்கு அந்த தேசத்திலே ரஹஸ்யமாயும்

கருவுகல வாசலிலேயிருந்து திருமேனி உபசாரத்தையும், ஸந்நிதி₄யிலேயிருந்து திருப்பவள உபசாரங்களையும், உடையவர் நியமநப்படி ஆராய்ந்துகொண்டு, அனைத்தழகும் கண்டருளப்பண்ணிக்கொண்டிருந்தார்.

உடையவரும் ப₃ஹுகாலம் ப்ரத₃க்ஷிணமாக திவ்ய தேசங்களையும் மங்களாஶாஸநம்பண்ணி, அவ்விடத்திலே யிருக்கிற எல்லாரையும் ஸ்ரீ வைஷ்ணவர்களையும் திருத்தி, பஞ்சஸம்ஸ்காராதி₃களையும் ஸாதி₄த்து, அந்தந்த ஸ்த₂லங்களிலே தம்முடைய மட₂மும் முத்₃ரையும் நடத்துவித்து, தி₃க்₃விஜயமும்பண்ணி, ஜயஸ்தம்ப₄மும் நாட்டி, ஸகலதேச ராஜாக்களையும் தத்தத்₃தே₃ஶ வித்₃வான்களையும் திருவடி களிலே சேரவிட்டுக்கொண்டு, ஶாரதா₃பீட₂த்திலே ஸரஸ்வதியாலே ஸத்க்ருதராய் **'ஸ்ரீபா₄ஷ்யகாரர்'** என்கிற திருநாமத்தை லபி₄த்து, தெற்கே ஆண்டாள் திருமாலிருஞ் சோலை அழகர்விஷயமாக மநோரதி₂த்த அர்த்த₂த்தைத் தலைக்கட்டினபடியாலே **'கோயிலண்ணன்'** என்கிற திருநாமத்தையும் அடைந்து கோயிலேற எழுந்தருள; கோயிலனைத்துக்கொத்தும் எதிர்கொண்டு ஸேவிக்க; உடையவரும், அவர்களை யதா₂யோக்₃யமாக ப்ரணிபாத ஆலிங்க₃ந குஶலப்ரஶ்நாதி₃களாலே ஸந்துஷ்டராக்கி, கோவிலிலே ஸேவாக்ரமத்திலே ஸேனைமுதலியாரநுமதி கொண்டு ஜயவிஜயாளநுமதியுடன் உள்ளே புகுந்து, பெருமாளை ஆபாத₃வ்ருத்தமநுப₄விக்க; பெருமாளும், உடையவரைக் கடாக்ஷித்து, 'நம்முடைய ஆராமங்களை ஆராய்ந்து, நம் து₃ர்ஶநத்தையும் களையறுத்து, நாலு தி₃க்கிலும் ஜயஸ்தம்ப₄மும் நாட்டிவந்தீரோ?' என்று அர்ச்சகமுக₂மாக விருது விட்டருளி, தீர்த்த₂ம் முதலான ஸகல வரிசைகளையும் ப்ரஸாதி₃த்து, 'நம்வீட்டுக் காரியத்தையும் ஆராய்ந்துகொண்டு கோயிலிலேதானே இரும்' என்று அருளிச்செய்ய; உடையவரும், 'த₄ந்யோ஽ஸ்மி' என்று கொண்டு மட₂த்திலே எழுந்தருளி, முதலியாண்டானை

அநுக்ரஹித்து, இற்றை வரைக்கும் சிந்தாமே மங்காமே திருவரங்கச்செல்வத்தை த்விகுணமாக வர்த்திப்பித்து அணைத்தழகும் நடத்திவைத்தபடியைக் கண்டு உகந்தருளி, ஸ்ரீகார்யவிசாரத்திலே அவரையே நியமித்து, பெரிய நம்பி முதலான முதலிகளுடனே புறப்பட்டது முதலாகப் பண்ணின உபய கைங்கர்யங்களையும் யதாவ்ருத்த மருளிச்செய்து, ஸ்ரீ பாஷ்யத்தை ஆழ்வானைக்கொண்டு பட்டோலையிடுவித்து நிறைவேறினவுடனே ஸந்நிதியிலே விண்ணப்பஞ்செய்ய, தம் மருமகனை நடாதூரம்மாள் கையிலே ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகோஶத்தைக் கொடுத்து ஶாரதா பீடத்துக்கு அனுப்பியருள, ஸரஸ்வதியும் அந்த ஸ்ரீ கோஶத்தை ஶிரஸாவஹித்து ஶ்லாகித்தவநந்தரம், அந்த நடாதூரம்மாளை நித்யமாக வேதவிண்ணப்பத்திலே கீதாபாஷ்யமானவுடனே ஶாரீரக பாஷ்யத்தையும் விண்ணப்பஞ் செய்யச்சொல்லி நியமித்தருள; அதுமுத லாக, வேதவிண்ணப்பத்திலே ருக்வேதம் முதலாக ஸ்ரீ பாஷ்யமும், தாம் செய்தருளின கத்யத்ரயத்தையும் ஆண்டானுக்கு நியமிக்க, விண்ணப்பமும் நடந்துவருகிறது.

இப்படி நடக்கிற காலத்திலே, ஒரு கல்தச்சன், முன்பு கோஶாலை கட்டுகிறபோது ஒரு கல்லின் நடுவிலே தேரையுப் தண்ணீருமிருக்கக் கண்டு, 'கல்லின் நடுவே யிருந்த தேரைக்கு ஜீவநம் கல்பித்த ஈஶ்வரன் நமக்கும் நடத்துவர்' என்று, தொழிலை விட்டு, பர்ந்யாஸம்பண்ணி, திருமுடிக்குறையிலே நிர்வ்யாபாரனாயிருக்க; அது அவர் அறிந்து, அழகியமணவாளப்பெருமாள் ப்ரதிதிநமும் இராமாறு திருவொத்த சாதத்தைக் கொண்டுபோய் அவனை பூஜிப்பித்துக்கொண்டிருக்க; காலாவதியாலே சில காலத் துக்குப் பின்பு ,அவன் மரித்த சேதியைக் கேட்டு, உடையவர் 'இன்றைக்கானாலும் அழகியமணவாளப்பெரு மாள் 'வெறுந்தலையுமாய் சோறுசுமவாமல் ஸுகமாயிருப்பர்' என்று அருளிச்செய்தார்.

அப்படியே, ஆழ்வான் முதலானவர்கள் பஞ்சகால பராயணராயிருக்குங் காலத்திலே; ஒருநாள் வர்ஷோபாதி₄யாலே ஆழ்வான் உபாத₃ாநத்துக்கு எழுந்தருளக்கூடாமல் உபவாஸமாயிருக்க; ராத்ரி ஆழ்வானுடைய தே₃விகளான் ஆண்டாள், திருவொத்த சாதம் அமுது செய்தருளுகிற பெரிய திருமணி ஓசையைக் கேட்டு, பெருமாளைக்குறித்து, 'ஆழ்வான் பட்டினியேயிருக்க தேவரீர் குலாவிக்குலாவி அமுதுசெய்தருளுவதே!' என்று நினைத்தவுடனே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், தளிகையிலே திருவொத்த சாதத்தைக் கொண்டு, ஆழ்வானை அழைத்து, 'அடியேன்! அழகிய மணவாளத₃ாஸன், பெருமாள் நியமநத்தினாலே ப்ரஸாத₃ம் கொண்டுவந்தேன், அங்கீ₃கரிக்கவேணும்' என்று சொல்ல; ஆழ்வானும் திகைத்து, ஆண்டாளை அழைத்து, 'என்ன நினைத்தாய்' என்று கேட்க; ஆண்டாளும் தான் நினைத்த படியைச்சொல்ல, ஆச்சர்யத்துடனே 'இது ஸ்ரீப₄ண்ட₃ாரத்திலே க்ரயத்தளிகையாயிருக்குமே' என்று கொஞ்சமாக எடுத்துக்கொண்டு, குறையை அனுப்பிவிட்டு, அதிலே ஆண்டாளுக்கு இரண்டு ப₄ாக₃மும் தமக்கொரு ப₄ாக₃மும் ப்ரஸாத₃ப்பட்டவநந்தரம், ஆண்டாள் திருவயிறுவாய்த்து, பத்துமாஸமும் சென்றவுடனே இரண்டு குமாரர்கள் திருவவதரிக்க; இச்சேதியை உடையவர் கேட்டு, ஸந்தோஷத்துடனே ஆழ்வானைக்கொண்டு புத்ரோத்ஸவாத்₃யுபலாளநங்களைப் பண்ணுவித்து பன்னிரண்டாம் நாள், உடையவர், தாம் ஆளவந்தார் மநோரத₂த்தை நிறைவேற்ற வேணும் என்று எம்பாருடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளி, எம்பாரை, குழந்தைகளை எடுத்துக்கொண்டு வரச்சொல்லி நியமிக்க, எம்பாரும், குழந்தைகளை எடுத்துக்கொண்டு, த்₃வயாநுஸந்த₄ாநத்துடனே வரக்கண்டு; உடையவரும் 'த்₃வயம் பரிமளிக்கிறது' என்று சொல்லி, ஒரு குழந்தைக்கு த₃ர்ஶநோபகாரகரான **ஸ்ரீபராஶரப₄ட்டப₄க₃வானுடைய** திருநாமம் சாத்தி, ஆளவந்தாருடைய மூன்று மநோரத₂மும் நிறைவேற்றி, மற்றக் குழந்தைக்கு

ஆழ்வானைக்கொண்டு அவர் திருத்தமப்பனாராகிற சீராமப் பிள்ளை திருநாமம் சாத்துவித்தார்.

இந்தப்படி உடையவர் உபயகைங்கர்ய நிர்வாஹக ராய், செங்கோல் செலுத்தி, உபயவிபூதியிலும் தம் முடைய சிறுமுறி செலுத்தி, எழுநூறு ஜீயர்களும், பன்னீராயிரம் ஏகாங்கிகளும், எழுபத்துநாலு ஆசார்ய புருஷர்களும், அஸங்க்யேய வைஷ்ணவர்களும் ஸேவிக்க, அறுபது சாதுர்மாஸ்யம் திருவரங்கந் திருப்பதியிலே வாழ்ந்துகொண்டிருக்கும் காலத்திலே;

இம்மண்டலாதிபதியான சோழன் பாபிஷ்டனாய் பகவத்த்வேஷியாய் திவ்யதேசங்களில் கோயில்களை இடிக்கத் தொடங்க; தத்புத்ரன், 'திருவாய்மொழியும் ஸ்ரீராமாயணமும் இரண்டும் திரள அவிசால்யமாயிருக்க, ஒன்றாலே திவ்யதேசங்களை அழிக்கப்போமோ?' என்று சொன்னாலும், துர்புத்தியாகையாலே கேளாமல் அப சாரப்பட்டு, ததநுகுணமாக குலபாம்ஸனனானான். புரோ ஹிதப்ரேரிதனாய், தர்ஶந ஸ்தாபநாசார்யரான ஸ்ரீபாஷ்ய காரர் கையிலே 'ஶிவாத் பரதரம் நாஸ்தி' என்று எழுத்து வாங்க உத்யோகித்து, கோயிலுக்கு ராஜபடாளையனுப்பி வைக்க, அந்த சேதியைக் கேட்டு, உடையவர் நியமநத்தி னாலே, பெரியநம்பி, கோயிலுக்குத் தீங்குவாராதபடி எல்லை யேற்றிக் காப்பிட்டிருக்கிற ஸமயத்திலே, ராஜபடாள் 'எம் பெருமானார் மடத்து வாசலிலே வந்து ப்ரபுவண்டைக்கு வரச்சொல்லி அழைக்க, உடையவர் நியமநத்தாலே ஆழ்வான் த்ரிதண்ட காஷாயங்களை தரித்து, பெரியநம்பி யுடனேகூட கங்கைகொண்டானுக்கு ராஜபடாளின் பின்னே போனார்.

உடையவரும், வெள்ளைசாத்திக்கொண்டு, முதலி யாண்டானையும் கூட்டிக்கொண்டு, பெருமாளை ஸ்வஶக்தி யாலே ரக்ஷித்துக்கொள்ளச் சொல்லி, மேற்கே புறப்பட்டு, பின்தொடர்ந்த ராஜபடாளை மணலை மந்த்ரித்து வழியிலே

இறைத்துத் தடுத்துப்பொகட்டு, மேற்கே மேல்நாட்டிலே எழுந்தருளி. முதலியாண்டான் ஸ்ரீபாத₃தீர்த்த₂த்திலே சில மதாந்தரஸ்த்த₂ரையும், தாம் திருவனந்தாழ்வானாய் ஸஹஸ்ர ஶிரஸ்ஸுக்களுடனேயிருந்து ப்ரஸங்க₃ம்பண்ணி அநேக மதாந்தரஸ்த்த₂ரையும் ஜயித்து, அத்தேசத்தில் ப்ரபு₄க்களை பஞ்சஸம்ஸ்காரராக்கி, யாத₃வாத்₃ரியை ஜீர்ணோத்₃த₄ரணம் செய்தருளி, அந்த திவ்யதேசத்துக்கு **'திருநாராயணபுரம்'** என்று திருநாமம்சாத்தி, டில்லிக்கெழுந் தருளி ராமப்ரியரை எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வந்து, அவருக்கு **'செல்வப்பிள்ளை'** என்று திருநாமம்சாத்தி, ப்ரதிஷ்டி₂ப்பித்து, தத்ரத்யபாஷண்ட₃ பௌத்₃த₄ாதி₃களைக் கற்காணமாட்டுவித்து, ஸ்வாமிக்கு * ஐம்பத்திருவரைக் கொண்டு அனைத்தழகும் நடத்திக்கொண்டு, உப₄ய கைங்கர்ய நிர்வாஹகராய் எழுந்தருளியிருந்தார்.

இவ்விடத்திலே, பெரியநம்பியும் கூரத்தாழ்வானும் சோழன் ஸமக்ஷத்திலே போய், வேத₃ஶாஸ்த்ரங்களினாலே ப₄க₃வத்பாரம்யத்தை ஸாதி₄த்தவிடத்திலே, து₃ரபி₄மாநத் தாலே 'ஶிவாத் பரதரம் நாஸ்தி' என்று எழுதச் சொல்லி நிர்ப்ப₃ந்தி₄க்க, ஆழ்வானும், அதை எழுதி, அதின்மேலே 'த்₃ரோணமஸ்தி தத: பரம்' என்று எழுதக்கண்ட சோழன் குபிதனாய், இருவரையும் ஆஜ்ஞை பண்ணச்சொல்ல, நேத்ரோத்பாடந வேத₃னை ஸஹிக்கமாட்டாமல், பெரியநம்பி திருநாட்டுக்கெழுந்தருளினார். ஆழ்வானும், அந்த 'பாபிஷ் ட₂னைக் கண்ட கண்களிருக்கவொண்ணாது' என்று பச்சைக் கருப்பூரத்தைச் சாத்திக்கொண்டு கண்ணையிழந்து,'ப்ராக்ருத ஸ்பர்ஶம் கூடாது' என்று இருக்குமளவில், மது₄ராந்தக ஸ்ரீவைஷ்ணவர் ஒருத்தரிருக்க, அவரை ஸஹாயமாக்கிப் பெரியநம்பியையும் ஸம்ஸ்கரித்து, கோயிலுக்கெழுந் தருளி; ஒருநாள் பெருமாளை ஸேவிக்கப்போனவிடத்திலே, ஆரியப₄ட்டாள் வாசலிலே ஒருத்தர் 'எம்பெருமானாருக்கு

---

* **ஐம்பத்திருவராவார்—திருவெள்ளறையிலிருந்து எம்பெருமானாலே திருநாராயணபுரத்துக்குக் கொண்டுசெல்லப்பட்ட 52 பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ குடும்ப₃ங்கள்.**

அந்தரங்க3ர் உள்ளே போகப்போகாது' என்று நிஷேதி4க்க, அத்தை ஒருவர் கேட்டு 'ஆழ்வான் மஹா ஸாத்விகர்; உள்ளே போகட்டும்' என்று சொல்ல; இவ்வார்த்தைகளை ஆழ்வான் கேட்டு, செவியைப் புதைத்து, 'நம்முடைய ஆத்மகு3ணம் ஆசார்யஸம்ப3ந்த4ாப4ாவத்துக்குறுப்பாவதே!' என்று சடக்கெனத் திரும்பி, திருமாளிகைக்குப்போய், விடிவோறே ஷாண்மாஸ *ஶிஶு*க்களையும் கூட்டிக்கொண்டு, ஆண்டாளுடன் திருமாலிருஞ்சோலைக்கெழுந்தருளி, அங்கே ஆசார்ய விரஹ*ஶீ*தராய் எழுந்தருளியிருந்தார்.

அநந்தரம், இந்த வ்ருத்தாந்தத்தை அர்க்4யப்ரதா3ந காலத்திலே எம்பெருமானார் கேட்டருளி, அபி4சாரார்க்4ய ப்ரதா3நத்தைப்பண்ண; திருவேங்கடமுடையான் தம்முடைய திருவாழியாலே அந்த சோழன் கழுத்திலே குத்த, தத்க்ஷணத்திலே வ்ரணம் ஜநித்து, து3ஷ்பரிஹரமாய் ப3ஹுவாய் க்ரிமித்து மரித்துப்போனான். அதுமுதலாக, அந்த சோழனுக்கு **க்ரிமிகண்ட2சோழன்** என்று பேராய்த்து.

தத3நந்தரம், தத்புத்ரன் ப3ஹுவாக அநுதப்தனாய், சேரபாண்டியரையும் அழைப்பித்து, மூன்றுபேரும் கோயிலுக்கு வர, கோயிலிலே உடையவர் எழுந்தருளினது முதலாக, கோயில் அரண்மனையாரதீ4நமாய், கருவுகலம் திருவாப4ரணப்பெட்டி முதலானதுகளுக்கு உடையவரிலச்சினையில்லாமல் க3ருட3முத்3ரையும் ஶங்க2முத்3ரையும் மாத்திரம் நடந்துகொண்டு வருகையில், ஆரியப4ட்டாள் அந்த ஸமயத்திலே சேர சோழ பாண்டிய முத்3ரை பெற்றார்கள்.

அந்த சோழனும், "பூர்வீகர் 'தே3வதா3யம்' முதலானதுகளை ப்ரபு4க்கள் விசாரிக்கலாகாது என்று ஒரு ப்3ராஹ்மணரதீ4நமாக நடத்திக்கொண்டுவந்தார்களே; இப்போதும் நம் தகப்பன் து3ர்வ்ருத்தனாய்ப் பட்ட பாடு கண்டோமே; இப்போது உங்கள் முன்னாக உடையவரை அழைப்பித்து, தேவஸ்த2ாநம் என் கைப்பிடியில்லாதபடி அவருக்கு

த₄ாரைவார்த்துக் கொடுக்கிறேன்'' என்று சேரபாண்டிய ருடனே ஆலோசனைபண்ணி, முன் பெருமாளை ஸேவித்து, மாறொன்றில்லா மாருதியாண்டானை எம்பெருமானார் ஸந்நிதி₄க்கு அனுப்பி, தாங்கள் பட்டணங்களுக்குப் போனார்கள்.

எம்பெருமானாரும், திருவரங்கத் திருப்பதியை விட்டு, பன்னிரண்டு வருஷம் திருநாராயணபுரம் ஜீர்ணோத்₃த₄ாரணம் முதலான கைங்கர்யங்களையும் நிர்வஹித்துக்கொண்டிருந்து, மாறொன்றில்லா மாருதியாண்டான் முக₂வசநத்தாலே கோயில் வ்ருத்தாந்தத்தை அறிந்து, தம் திருவடிகளில் ப்ரவணரான ஐம்பத்திருவர் த₄ரிக்கும்படி அர்ச்சாவதாரமாகத் தம் ப்ரதிமை ப்ரதிஷ்டி₂ப்பித்து, அங்கிலும் புறப்பட்டுத் திருமலை வழியாக எழுந்தருளி, திருமலையடிவாரத்திலே தில்லை கோவிந்தராஜனை ப்ரதிஷ்ட்டி₂ப்பித்து, தில்லைமூவாயிரவரிலே அநுகூலருக்கு ஆஶ்ரயணாதி₃களை ஸாதி₃த்துக் கைங்கர்யபரராக்கி, திருமாலிருஞ்சோலையிலெழுந்தருளி, ஆழ்வானையுங் கூட்டிக்கொண்டு கோயிலிலே எழுந்தருளின சேதியைக்கேட்டு, பெருமாள் பரிகரம் அனைத்துக்கொத்தும் ப்ரஸாத₃த்துடனே எதிர்கொண்டு பெருமாள் ஸந்நிதி₄யிலே அழைத்துவர; பெருமாளும், முன்புபோலே செங்கோல் முதலான வரிசைகளை ப்ரஸாதி₃த்து மட₂த்தேற அனுப்பியருள; உடையவரும், தமக்கு ப்ரஸாதி₃த்த வெள்ளை வகச்சல் குறுமாலைகளிலே, வெள்ளையை ஆண்டானுக்கும், வகச்சலை ஆழ்வானுக்கும் ஸாதி₃த்து ஸந்துஷ்டராய், மட₂த்திலேயெழுந்தருளின சேதியைக் கேட்டுக்கொண்டு, **குலோத்துங்க சோழனும்** கோயிலுக்கு வந்து, எம்பெருமானாரை ஸேவித்து, கோயிலதி₄காரம் தனக்குப் பணியில்லாதபடி த₄ாராபூர்வகமாக த₃ாநஶாஸநம் பண்ணிக்கொடுத்து, "திருவடிகளிலே ஆஶ்ரயிக்கவேணும்'' என்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் உகந்தருளி, அந்த சோழனை ஆண்டான் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்து, திருவரங்கத் திருப்பதியை ஆண்

டானுக்கு தாராபூர்வகமாக தாநஶாஸநம் பண்ணுவித்து, இந்த வ்ருத்தாந்தத்தை ஆரியபட்டாள்வாசலிலே ஶிலா லிகிதம் பண்ணுவித்தார்.

உடையவர் கோயிலுக்கு எழுந்தருளின யோகக்ஷேமங் கேட்டு, கந்தாடையாண்டான் முதலான முதலிகளும் பெருமாள்கோயிலிலும் கோயிலுக்கெழுந்தருளி, எம்பெரு மானார் திருவடிதொழுது ஹ்ருஷ்டரானார்கள்.

உடையவரும், யதாபூர்வமாக ஆண்டானைக்கொண்டு ஸ்ரீகாரியத்தை நடத்துவித்துக்கொண்டு வருமளவில், ஒரு மஹோத்ஸவத்தில் தாநப்ரகரணத்திலே, உபகாரஸ்ம்ருதி யாலே, பெரியநம்பி குமாரருக்கு, மாடமாளிகை சூழ் திருவீதியில் கீழ்மாடத்திருவீதியில் தென்கண்டத்தில் மேல் புறத்தில் ப்ரதமநிவேஶநமான ஆளவந்தார்மடத்தையும், ஆழ்வானுக்கு அதுக்கு எதிர்மனையையும், ஆண்டானுக்கு அதுக்குத் தென்மனையையும் தானம் பண்ணுவித்து, தாந ஶாஸநமாக ஸ்ரீ ஸேநாபதிபட்டையமும் ஸாதித்தருளினார்.

இப்படி எம்பெருமானார் முதலிகளுடன் வாழ்ந்தருளி நூறு சாதுர்மாஸ்யாநந்தரம் ஶதாபிஷேகமும் கண்டருளி, **'எதிராஜன்'** என்று பேர் லபித்து; தம்முடைய ஶிஷ்யரான **ராமாநுஜதாஸன்** என்கிற ஶில்பிக்கு ஏகாந்தஸேவை ஸாதித்து; யதாபூர்வமாக ஸ்வவிக்ரஹத்தை ஏறியருளப் பண்ணுவித்து, ஸ்வாம்ஶ திவ்யஶக்தியை ஆதாநம்பண்ணி, கந்தாடை ஆண்டானைக்கொண்டு ஸ்ரீ பெரும்பூதூரிலே ப்ரதிஷ்டிப்பித்து, பெருமாள் ஸந்நிதியிலே தன்னுடைச் சோதிக்கு விடைபெற்று, கந்தாடையாண்டானையும் பட்டரையும் அழைத்து "நம்பெருமாள் கைங்கர்யத்தை யும் நம் தர்ஶநத்தையும் நன்றாகப் பண்ணுங்கோள்" என்று நியமித்து, பரிஜநங்களை க்ஷாமணம்பண்ணிக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினார்.

ஸ்ரீ ஸேநாதி₄பதிது₄ரந்த₄ரரான கந்தாடையாண்டானும், பெருமாள் நியமநத்தினாலே, அகளங்கன் திருவீதியில் தென்கீழ்புறத்தில் சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபத்திலே எதிராஜனையும் உத்ஸவரையும் ப்ரதிஷ்டி₂ப்பித்து, மார்கழிமாஸம் முப்பதுநாளும் பெரியஸந்நிதி₄ நம்பிமார் எதிராஜனுக்குத் தளிகை அமுதுசெய்யப் பண்ணவும், திருமொழி திருவாய்மொழித் திருநாளிலேயும் இயற்பாவன்றைக்கும் ஆழ்வார்களுடனே ஸந்நிதி₄க்கு எழுந்தருளும்படியும், திருநக்ஷத்ர உபலாளநமும் ஏழுநாளாகப் பண்ணி, திருநக்ஷத்ரத்தினன்று ஆழ்வார்களைப்போலே ஸந்நிதி₄க்கெழுந்தருளி, மஹோத்ஸவத்தில் ஸப்தாவரணத்தினன்று தன் திருவாசலிலே திருக்கைத்தலத்திலே பெருமாளை மங்க₃ளாஶாஸநம் பண்ணும்படியும் பண்ணுவித்து, பெருமாளுக்கு அனைத்தழகும் கண்டருளப் பண்ணுவித்தார்.

(1) உடையவர் திருவவதரித்த பன்னிரண்டாம் நாள் பெரியதிருமலைநம்பி நாமகரணம் பண்ணினபேர் **இளையாழ்வார்;** (2) ஆஶ்ரமஸ்வீகாராநந்தரம் தேவப்பெருமாள் ஸாதி₂த்த பெயர் **எதிராஜன்;** (3) கோயிலுக்கெழுந்தருளின பின்பு பெருமாள் ஸாதி₂த்தது **உடையவர்;** (4) ஆத்மகு₃ணத்தாலே திருக்கோட்டியூர் நம்பிபக்கல் பெற்றபேர் **எம்பெருமானார்;** (5) உப₄யகைங்கர்யத்தினாலேயும் கோதை சூடிக்கொடுத்த நாய்ச்சியார் ஸாதி₃த்தபேர் **கோயிலண்ணன்;** (6) ஶாரதா₃பீட₂த்தில் ஸரஸ்வதி சாத்தின திருநாமம் **ஸ்ரீப₄ாஷ்யகாரர்;** (2) ஸ்வமாஹாத்ம்யத்தினாலே ஶதாபி₄ஷேகம் கண்டருளி லபி₄த்தபேர் **எதிராஜன்;** (7) பெரியநம்பி ஸாதி₃த்தது **ராமானுஜன்;** ஆக ஏழு நாமங்களிலேயும், பெரியநம்பியும், பெரியபெருமாளும் ஸாதி₃த்த திருநாமங்கள் இரண்டுமே பட்டப்பேராய், அருளப்பாடு ஸாதி₂க்கிறது.

## ப₄ட்டர் வைப₄வம்

அநந்தரம், ப₄ாஷ்யகாரர் நியமநத்தினாலே ப₄ட்டர் த₃ர்ஶநம் நிர்வஹிக்கிற காலத்திலே; உடையவர் நியம

நத்தை அடியொற்றிக்கொண்டிருக்கிற பெருமாள், ப₄ட்டருக்குத் தம் வரிசைகளை ஸாதி₃த்து 'வேதா₃ந்திகளை ஜயித்து நம் த₃ர்ஶநத்துக்கு ஆட்பண்ணும்' என்று நியமித்து, விடை ஸாதி₃க்க; வரிசையுடன் புறப்பட்டு, வேதா₃ந்திகளை ஜயித்துவர; வேதா₃ந்திகளும் ஸம்ஸாரத்தில் அருசியாலே ஸந்யஸித்து, கு₃ருகுலவாஸம் பண்ணும் காலத்திலே, திருவிக்கிரமன் திருவீதித்திருமதிள் கேவலம் ஜீர்ணமாய்ச் சரிந்துவிழ, வீரஸுந்த₃ர ப்₃ரஹ்மாராயர் அந்த மதிளைக் கட்டிவைத்தார்.

அதின்பின்பு, வேதா₃ந்திகளான நஞ்சீயரும் ப₄ட்டரும் த₃ர்ஶநம் நிர்வஹித்துக்கொண்டிருக்கும் காலத்திலே; திருவரங்கவள்ளலார் திருமஞ்சந ஶ்லோகம் விண்ணப்பம் செய்கிறதுக்கு நாநாவித₄மாக உத்ப்ரேக்ஷித்து, ஶ்லோகங்களும், அதுக்கு ஈடுகளும் அருளிச்செய்து, கைஶிக புராணத்துக்கும் ஈடும் அருளிச்செய்து, ஒரு கார்த்திகை மாஸத்தில் கைஶிக த்₃வாத₃சியினன்று புராணத்துக்கு அருளப்பாடு ஸாதி₃த்து, பட்டும் பருத்தியும் முதலான வரிசைகளை ஸாதி₃த்தவுடனே, தாமருளிச்செய்த ஈட்டுடனே புராணத்தை விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் போர உகந்தருளி 'நம் ப₄ட்டனை மேல்வீட்டில் விட்டுவா' என்று கொவணவனை நியமித்தருள; ப₄ட்டரும் உகப்புடனே முன் போலே ப்₃ரஹ்மரத₂த்திலே திருமாளிகையிலே ஸகல வரிசைகளுடனே எழுந்தருளி, ப்₃ரஹ்மரந்த்₄ரத்தை பே₄தி₃த்துக்கொண்டு திருநாட்டுக்கெழுந்தருளினர்.

## சீராமப்பிள்ளை வைப₄வம்

அநந்தரம், அவருடைய திருத்தம்பியார் சீராமப்பிள்ளை பௌரோஹித்யமும் புராணபட₂ந கைங்கர்யமும் பண்ணிக் கொண்டிருந்தார்.

## கூரநாராயணஜீயர் வைப₄வம்

நஞ்ஜீயர் த₃ர்ஶநம் நிர்வஹித்துக் கொண்டிருக்கிற காலத்திலே; விண்ணப்பஞ் செய்வாரிலே ஒருத்தர் பெரு

மாள் ஸந்நிதி₄க்கு யோக்₃யமாகாமலிருக்க; ஆழ்வானுடைய தே₃விகள் ஆண்டாள்-அவரிடத்தில் க்ருபையாலே, ஆழ்வான் திருமாலிருஞ்சோலையிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, ஆழ்வான் திருவடிகளிலே ஆஶ்ரயித்து ஸங்யஸித்து, ஆசார்யன் குடியை நிரூபகமாகக் கற்ற **'கூரநாராயணஜீயர்'** என்று திருநாமத்தையுடையவராய், மஹாமாந்த்ரிகராய், கோயில்வாஸம் பண்ணிக்கொண்டிருக்கிறவரை அழைத்து, 'உம்முடைய மந்த்ரங்களும் ஒரு கைங்கர்யத்திலே உபயோகி₃க்கும் என்று சொல்லியிருந்தீரே! நீரிப்போது இந்த விண்ணப்பஞ் செய்வாரைப் பெருமாள் கைங்கர்யத்துக்கு யோக்₃யராம்படி பண்ணும்' என்று நியமிக்க, அந்தக் கூரநாராயணஜீயரும், ஸுத₃ர்ஶநஶதகத்தைப் பண்ணினர். தத்காலத்திலேயிருந்த அரையரிலே ஒருத்தர், கேவலம் தூ₄ர்த்தராய், சிற்றின்பத்திலே மண்டி, கீழ்ப்பறைச்சேரியிலே திரிய; தெரியச் சொன்னலும் கேளாமல் ஸ்வஜநங்களாலே நிரஸ்தராய், பறைச்சேரியிலேதானே நியதமாக வாஸம்பண்ணிக்கொண்டிருக்குங் காலத்திலே: பெருமாள் ஒரு மஹோத்ஸவத்திலே எட்டாந்திருநாள் கீழையூருக்கு எழுந்தருளுகிறதாக, அக்கரை நாலுகால் மண்டபத்திலே எழுந்தருளியிருக்க; இவர் பறைச்சேரியிலேயிருந்து பள்ளும்பறையும் இசையுடனே பாடக் கேட்டருளி; பெருமாள் ஸ்ரீபாத₃ம் தாங்குவாருக்கு கு₃ருவாயிருந்துகொண்டு பறைச்சேரியிலேயிருக்கிற அரையரை ஸந்நிதி₄க்கு அழைத்துவரச்சொல்லி நியமித்தருள; அவரும் வருகிறதுக்கு ஸங்கோசித்திருக்க; அனைத்துக்கொத்து பரிகரங்களும் ஜீயர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸங்க₃தராயிருக்க; பெருமாளும் தம் விஷயீகாரம் ப்ரஸித்₃த₄மாம்படி அவருக்கு **'வரந்தரும் பெருமாளரையர்'** என்று பட்டப்பேர் ஸாதி₃த்து, அவர் ஸகலருக்கும் ஸர்வாபீ₄ஷ்டங்களும் அப்போது வரங்கொடுக்கும்படி அநுக்₃ரஹித்தருளி; அவருக்கு விஷயவைலக்ஷண்யத்தை உண்டாக்கி, பரிஶுத்₃த₄ராக்கி, திருவூறல் நடந்து திரும்பி எழுந்தருளுகிறபோதும் ஏழாந்திருநாள் (பெருமாள்) நாய்ச்சியார்

கோயிலும் கோயிலுக்கு எழுந்தருளுகிறபோதும் அவர் பாடின பள்ளும் பறையும் இசையிலே கேட்டருளும்படி திருவுள்ளம்பற்றி; அந்தப்படியே செய்யச் சொல்லி நியமித் தருளினார். அது முதலாக அரையருக்கு **வரந்தரும் பெருமாளரையர்** என்கிற பட்டப்பேரும் சென்று வருகிறது. ஆக, நாலு பட்டப்பேர் அரையருக்கு.

இந்தப்படி பெருமாள் அரையரை அநுக்3ரஹித்தருளி வாழ்ந்தருளுங் காலத்திலே, மேற்கே ஸ்ரீரங்க3பட்டண ப்ரபு4 ப்ரேரிதனாய் ஒரு க்ஷுத்3ர முண்டான ஸந்யாஸி, பெரியபெருமாளை ஸ்ரீரங்க3பட்டணத்துக்குக் கொண்டுபோகிறதாக அத்3ருஶ்யாஞ்ஜநத்தைப் போட்டுக்கொண்டு ஒருத்தருக்கும் தெரியாமல் ப3லிபீட2த்தில் ப்ரஸாத3த்தை எடுத்துக்கொண்டு தே3ஹதா4ரணம்பண்ணி மந்த்ரஶக்தியாலே பெரியபெருமாளைத் திருவனந்தாழ்வான் திருப்படுக்கையிலும் நாலு அங்கு3லம் சலிப்பிக்க; மூலப்4ருத்யரும் நம்பிமாரும் உள்ளாரும் கண்டு அனைவருடன் உரைக்க; கூரநாராயண ஜீயரும், சேதியைக் கேட்டு, உபாயமாகச் சோதிக்குமளவில்; ப3லிபீட2த்தில் ப்ரஸாத3ம் அத்3ருஶ்யமாய்ப் போகிறபடியினாலே; ஒருநாள் ப3லிப்ரஸாத3த்திலே கடுகும் மிளகும் கலந்து சேர்த்து ப3லிப்ரஸாத3ம் பண்ணுவிக்க; அதையறியாமல் அந்த க்ஷுத்3ர ஸந்யாஸி எப்போதையும் போலே அந்த ப்ரஸாத3த்தை ப4க்ஷிக்க, அழல்வேக3த்தாலே கண்ணிலே நீர்சொரிந்து அஞ்ஜனம் கரைந்து வெளிப்பட்டான். அநந்தரம் கூரநாராயணஜீயரும் அந்த ஸந்யாஸியை ப3ஹுப்ரலோப4நம்பண்ணி, கருவுகலத்தில் பதா3ர்த்த2ங்களைக் காண்பித்து ஸமாதா4நங்களாலே வஶீகரித்து, பெருமாளை யதா2ஸ்தி2தமாக மந்த்ரஶக்தியாலே எழுந்தருளப் பண்ணுவித்து, கருவுகலத்திலே அவனுக்கு வேண்டின வஸ்த்ராப4ரணாதி3களைக்கட்டி அந்த ஸந்யாஸியின் பின்னே ஆள்கள் கையிலே அனுப்பி, கூட வழித்துணையாக நாலு ஜட்டிகளை அனுப்பி, வக்தவ்யாம்ஶத்தை அவர்களுடன்

சொல்லியனுப்பிவைக்க; ஸந்யாஸியும், அவர்களுடன் புறப்பட்டு, ஜாக்₃ரதையாய்ப்போய், அப்புறம் நிர்ப்ப₄யனுயிருக்க; இந்த ஜட்டிகள் நாலுபேரும், அவன் அஶுசியாயிருக்கிற ஸமயத்திலே சடக்கென அவனை வதி₄த்து, வஸ்த்ராப₄ரணாதி₃களை யதா₂பூர்வமாக கருவுகலத்தில் முதலிடுவித்தார்கள்.

கீழையூரிலே சைவம் விஞ்சி, பெருமாள் எட்டாந்திருநாளுக்கு அகி₂லாண்டே₃ஶ்வரிக்கு ஸேவைஸாதி₃த்து ஜம்பு₃ தீர்த்த₂த்திலே திருவடிவிளக்கி, கிழக்கே உத்தமஶீலிக்கு வடக்கே திருமங்கைமன்னன் திருத்தோப்புக்கெழுந்தருளுகிறதுக்கு க்ரிமிகண்ட₂ன் நாள்முதலாகச் சேஷ்டை பண்ணுகையில்; "அவர்களை நிரஸிக்கவேணும்" என்று இந்தக் கூரநாராயணஜீயர் அவர்களுடனே மருவி ஸ்நேஹம்பண்ணி, புறையறக் கலந்து, அந்த சைவர் விஶ்வஸித்தபின்பு, அவர்களுக்கு "மஹேஶ்வர பூஜை பண்ணுகிறோம்" என்று கிழக்கே காட்டழகியசிங்கர் கோயிலுக்குப் பின் வெளியிலே பெரியதாகச் சாலையும் நிரைச்சலும் கட்டிவைத்து, அதிலே பாகயத்நத்தைப் பண்ணுவித்து, பெரியதாக ஒரு கொப்பரையிலே நெய்யையும் காய்ச்சி வைத்து, சைவர்களனைவரையும் அழைப்பித்து, அவர்களனைவரும் சாப்பிடவிருந்தவுடனே, தாமும அந்தக் காய்கிற நெய்க் கொப்பரையிலே நரஸிம்ஹயந்த்ரத்தை மார்பிலே கட்டிக்கொண்டு குதிக்கிறபோது, அந்த ஶைவரனைவரும் தீய்ந்து ப₄ஸ்மமாய்ப் போனார்கள்.

இதுவும், ஒருகால விஶேஷத்திலே பதினெட்டாம் பெருக்குக்குப் பெருமாள் எழுந்தருளி, முன்நடந்தபடி திருப்பள்ளி ஓடத்திலே ஏறியருளி, திருப்பள்ளிஓடத் திருநாள் கண்டருளுகையில்; க்ஷுத்₃ர மந்த்ராக்ருஷ்டராய் நடுத் திருக்காவேரியிலே ப்ரவாஹத்துடனே எழுந்தருள; அச்சேதியைக் கேட்டு, கூரநாராயணஜீயரும், தம்முடைய கையில் வலயபவித்ரத்தை வலமாகத் திருப்ப; பெருமாள் திருப்பள்ளி ஓடமும் ப்ரவாஹத்துக்கெதிரே நிலையிலே

யெழுந்தருளி, நாய்ச்சியாரும் பெருமாளும் ஸுகமாகக் கோயிலிலே எழுந்தருளினர்.

ப்ரதிஸம்வத்ஸரமும் திருக்காவேரி பெருக்குவந்தால் திருக்குறளப்பன் ஸந்நிதியும் முழுகிப்போய், கோயிலிலே யும் ஜலம் வருகையில், இச்சேதியை இந்த தேசாதிபதி யான ப்ரபுவுக்கும் அறிக்கைபண்ணி, ஸ்ரீஸேநாபதி துரந்த்ரரான கந்தாடைதோழப்பருடனேயும் ஆலோசனைபண்ணி, மேற்கே புந்நாக தீர்த்தத்தின் தெருவுக்கு முதலாகத் தெருக் கடைசி திருக்காவேரியை வெட்டிவிடுமளவில், சிந்தாமணி ப்ராஹ்மணர் தங்களுரெல்லையிலே வெட்டவொட்டோம் என்று குறுக்கே படுத்துக்கொண்டு, ப்ரதிபந்தகம் பண்ணுகையில், அவர்களுக்கு "பெருமாள் கைங்கர்யம்" என்று எத்தனையாகத் தெரியச் சொன்னாலும், கேளாத படியாலே, அந்த பகவத்கைங்கர்ய விரோதிகளை அறப் பார்த்து, திருக்காவேரியையும் தெற்கே திருப்பி, திருமுடிக் குறை விப்ரநாராயணன் தோப்புக்குக் கிழக்கு முதலாகத் திருவரங்கந் திருப்பதிக்கு இருபுறமும் கரையும் போடுவித்து, அதிலே அணியரங்கன் வாய்த்தலையும் கட்டுவித்து, அந்தக் கரையிலே புந்நாக தீர்த்தத்துக்கு ஆக்நேயபாகத்திலே உடைப்பு எடுக்கிற ஸமயமாயிருக்கையில், தம்முடைய ஶிஷ்யரான கருணாகரதாஸனை அங்கே காவலாகவைத்து, அவனை அறப்பார்ப்பித்து; அதுக்கு வடக்காக, ரக்ஷையாக க்ஷேத்ரதேவதையையும் ப்ரதிஷ்டிப்பித்து, கோயிலுக்கு ரக்ஷையாக க்ராமதேவதையான திருவரங்கச்செல்வியையும் ப்ரதிஷ்டிப்பித்து, கீழ்ப்புறம் பத்ரம்பண்ணி, இந்தப்படி க்ஷேத்ரருடைய க்ருத்ரிமங்களுக்கு அவகாஶமில்லாதபடி அரணைப்பண்ணி; கோயிலுக்கு மேற்கே பெரியதாக ஒரு ஊரணியை வெட்டுவித்து, அதிலே திருப்பள்ளி ஓடத்திரு நாள் நடத்தும்படி பண்ணிவைத்து; கீழையூர் ஜம்புலிங்கத் துக்கு நேராகக் கரைஅழகியசிங்கரை ப்ரதிஷ்டிப்பித்து, தச்சக்தி அபிபூதமாம்படி பண்ணி; கோயிலிலே ஒருத் தரும் குடியிராதபடி யந்த்ரஸ்தாபநம்பண்ணி, ஜ்வரத்தை

யுண்டாக்கி; கோயிலிலே ராஜமஹேந்த்ரன் திருவீதியிலே கீழண்டையிலே திருமண்டபம் ஜீர்ணோத்தாரணம்பண்ணி, சித்ரங்களை எழுதுவிக்குமளவில்; சுவரிலே ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டமும் எழுதியிருக்கையில், அந்த ப்ரதிமைகள் யதாஶாஸ்த்ரமாக இருந்தபடியாலே ராத்ரி நித்யமாக யுத்தங்கள் ப்ரவ்ருத்தங்களாய் விடிவோறே ரக்தமாம்ஸாதிகள் விழுந்திருக்கக்கண்டு, அங்கபங்காதிகளைப் பண்ணிவைத்தும்; அந்தத் திருவீதியிலே, உறையூர் கமலவல்லி நாய்ச்சியாரையும், சாந்துநாய்ச்சியாரையும், சேரகுல வல்லிநாய்ச்சியாரையும், யாகஶாலையிலே கோபிநாதரை யும், ஶங்கநிதி, பத்மநிதியையும், அந்தத் திருவாசல் வெளிப்புறத்திலே பத்ரஸுபத்ரரையும், ஜீர்ணோத்தா ரணம் பண்ணுவித்து; குலஶேகரன் திருவீதியிலே சேனை வென்றான் திருமண்டபத்துக்கு மேற்கு துலாபுருஷ மண்ட பத்திலே ஸ்ரீவராஹநயினாரையும், அதுக்கு வடக்குத் திருமங்கையாழ்வார் திருநடைமாளிகையிலே வஸந்த கோபாலனையும், ஹயக்ரீவரையும்; தெற்கில் ஆரிய பட்டாள் வாசலுக்குக் கிழக்கே சுந்தரபாண்டியதேவர் துலாபுருஷ மண்டபத்திலே, குழலூதும் பிள்ளையையும், அந்தாதி எம்பெருமானையும், ஆலிநாடன் திருவீதியில் சந்த்ரபுஷ்கரணிக்கரையிலே கோவிந்தனையும், வேத வ்யாஸரையும், ஞானப்பிரானையும்; அகளங்கன் திருவீதி வடக்குத் திருவாசலுக்குக் கிழக்கே, எடுத்தகை அழகிய நயினாருக்கு நாய்ச்சியாரையும், எதிராஜன் கோயிலுக்கு வடக்கே, திருவாழியாழ்வானுக்கு எதிராக பார்த்தஸாரதி யையும், சக்கரவர்த்தித் திருமகனுக்கெதிராக விட்டலே ஶ்வரனையும் ப்ரதிஷ்டிப்பித்தார்.

இப்படி இந்தக் கூரநாராயணஜீயர், தேஶாந்தரி ஜீயராயிருந்து அநேகம் ப்ரகாரம் கோயிலை நிர்வஹித்து அபிமாநியாயிருக்கிறபடியினாலே, ஸ்தலத்திலே அனைத்துக் கொத்து பரிஜநங்களும், "இப்படி அபிமாநியான ஜீயர்

நமக்குத் தலைவராய் அதீநபரராயிருக்கவேணும்" என்று ஆலோசனைபண்ணி, எம்பெருமானார் நியமநத்தையும் அதிக்ரமிக்கமாட்டாதேயிருக்கும் காலத்திலே; கந்தாடை யாண்டான் பௌத்ரர் பெரியஆயி யாகம்பண்ண, அந்த யாகஶாலைக்குப் பெருமாள் எழுந்தருள, ஆயியும் ஹ்ருஷ்டராய், தம்முடைய ஸர்வஸ்வத்தையும் பெருமாளுக்கு ஸமர்ப்பிக்க; அநந்தரம் ஒரு உத்ஸவகாலத்திலே, பெருமாள் முதலியாண்டானுக்கு உத்தரம்ஸாதித்த ஸேநாபதிபட்டையமும், சேரன் ஸமர்ப்பித்த தாநஶாஸநமும், தாநபூர்வகமாக அந்த ஆயிக்கு ப்ரஸாதித்து, ததீநமான உடையவரிலச்சினையான திருவாழி மோதிரத்தையும், ஆயி ஸம்மதியுடனே அனைத்துக்கொத்து பரிகரமும் கூரநாராயண ஜீயருக்கு ஸந்நிதியிலே ப்ரஸாதிக்கும்படி பண்ணி, ஜீயரை மடத்திலே விட்டு வந்தார்கள்.

அதுமுதலாக, கூரநாராயணஜீயர் பக்த்யதிஶயத்தாலே நலந்திகழ் நாராயணஜீயராயிருந்தவருக்கு "ஸ்ரீரங்கநாராயண ஜீயர்" என்று திருநாமமாய்த்து. இந்த ஸ்ரீரங்கநாராயண ஜீயர் கைங்கர்ய விவரம்:—செங்கோல் தரித்து ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கிற கோவணவர் கைங்கர்யத்திலே பிரித்துக் கட்டுகிறதுக்கு விவரம்;—திருமஞ்சநத்துடனே கருவுகல வாசலிலே வந்து, அஞ்சநக்காப்பு முதலான ஸுகந்தாதிகளைத் திருத்திவைத்து, நாய்ச்சியார்கோயிலுக்கு அனுப்புகிற அஞ்சநக்காப்பு முதலான ஸுகந்தங்களுக்குத் திருவாழி யிலச்சினையிட்டு, ஸந்நிதியிலே புகுந்து திருவாராதநம் நடப்பித்து, அலங்காராஸநார்த்தம் ஸந்நிதியிலேயிருந்து, கஸ்தூரித் திருமண்காப்பு அஞ்சநக்காப்பு சாத்தியருளின பின்பு, நாய்ச்சியார் கோயிலுக்குப்போய், அங்கேயும் திருவாராதந காலத்திலே இலச்சினைப்படியேயிருக்கிற அஞ்சநக்காப்பு கஸ்தூரித் திருமண்காப்பு ஆனவுடனே, வெளியிலே புறப்பட்டு எழுந்தருளுகிறதும், புழுகாப்புச்

சாத்துவிக்கிறதும், குறுக்காவரணத்துக்குப் பின்பு கோவணவரில் ப்ரதா4நராய் மட2த்திலேயிருந்து நிறைவுகுறைவு விசாரிக்கிறதும் கைங்கர்யம்.

இவர் பேர் விவரம்:—பெருமாள் புறப்பட்டுத் திருவணுக்கன் திருவாசலுக்கு மேற்கே திரும்பினவுடனே ஸேவிக்க, தீர்த்த2மும் பரிவட்டமும் ஒரு திருமாலையும் ஸ்ரீஶட2கோபனும் ஸாதி3த்து, பின்பு செங்கோலதி4காரிக்கு ஸேனை முதலியார் வாசலிலே, அன்றியிலே அங்கேதானே, வரிசைகளை ஸாதி3க்கும்படி பண்ணியும், நித்யமாக செங்கோலுக்கு முன்னே ஸேனைமுதலியார் ஸந்நிதி4யிலே, ப்ரஸாத3ஸ்வீகாரம் பண்ணுவிக்கிறதும், தீர்த்த2 விநியோக3த்திலும் ப்ரஸாத3 விநியோக3த்திலும் செங்கோலுக்குமுன்னே **ஸ்ரீரங்க3 நாராயணஜீயர்**' என்று அருளப்பாடு ஸாதி3த்து விநியோக3ம் ஸாதி3க்கிறதும், தே3ஹதா4ரணத்துக்கு ஸேனைமுதலியார் ஸந்நிதி4யிலே ப்ரஸாத3ஸ்வீகாரம் ஸாதி3க்கிறதும், கோயில் ஸ்ரீகார்யங்களிலே 'ஸேனாபதிது4ரந்த4ரரான ஸ்ரீரங்க3 நாராயணஜீயர்' என்று திருமுகமெழுதுகிறதும் நூதநமாகையாலே; அநாதி3யாய் திருமொழித் திருநாளிலே திருமாலை அபி4நயத்திலே 'அரங்கனார்க்காட்செய்யாதே' என்கிற ப்ரகரணத்திலே, ப்ரத2மம், ஸ்ரீஸேனாபதிது4ரந்த4ரரான கோவணவர் கைங்கர்யத்தை அபி4நயிக்கிறதிலே, செங்கோல் த4ரித்து ஸ்ரீகார்யம் விசாரிக்கிற ப்ரகாரத்தை அநுஸரிக்கிறதேயல்லாமல், நூதநமான ஸ்ரீரங்க3நாராயண ஜீயரை அநுஸரிக்கிறதில்லை.

இந்த ஸ்ரீரங்க3நாராயண ஜீயர் பட்டம் ஸ்த2லத்தாரால் உண்டாக்கினபடியாலே, அதீ4நபரம்பரையாய் வருகையன்றிக்கே, ஜீயர் திருநாட்டுக்கெழுந்தருளினவுடனே, திருவாழி மோதிரமும் மட2மும் ஸ்ரீப4ண்டா3ரத்திலே சேர; பரிகரங்களும், அதுக்குப் பின்பு ஸ்த2லத்திலே அனைவரும் ஸம்மதித்து, ஒரு ஜீயரை "ஸ்ரீரங்க3நாராயணஜீயர்" என்று ஸந்நிதி4யிலே அவர் வரிசையை ஸாதி3த்து, திருவாழி மோதிர

மும் ஸாதித்து, மடத்திலேயும் கொண்டுபோய் விட்டு, அங்கு வாரண ஸ்ரீபண்டாரத்திலே செலவழிக்கிறதாக நடந்தது.

துலுக்காவணத்துக்குப் பின்பு, காலவிஶேஷத்திலே, உத்தமர்கோவில் ஸ்ரீரங்கராஜர் ஸ்ரீரங்கநாராயணஜீயராய், வாசாலகராகையாலே மடத்துக்கு ஸ்ரீரங்கராஜர் திருவாராதனமுண்டுபண்ணி, அதீநம் ஸ்ரீபண்டாரமாகையாலே, ஸ்ரீரங்கராஜர் திருவாராதநத்துக்குத் திருக்கொட்டாரத்திலே அமுதுபடி, நெய்யமுது, திருவிளக்கெண்ணெய், பாலமுதுக்குப்பசு, அதுக்குத் தவிடு முதலானதுகளுமுண்டாக்கிக் கொண்டு பற்றினர். கோயில் பரிஜநங்களில், ஶூத்ரக் கொத்துக்கு ஆஶ்ரயணமும் ஸாதித்துக்கொண்டுவந்தார்.

ஸ்தலத்தாரனைவரும் கல்பித்த கட்டளைப்படிக்கு, உடையவர் நடப்பித்த ஸம்ப்ரதாயநுகுணமாகக் கொத்துக்கு நிர்ணயமும், ஜீயர் ஏகாங்கி வ்யவஸ்த்தையும், இவர்களுக்குக் கைங்கர்யமும், திருமுகப் பட்டையமாக தர்ம வர்மாவின் திருமதிளிலே திருவணுக்கன் திருவாசலுக்கு மேற்கே ஶிலாலிகிதம் பண்ணுவித்தார்கள்.

## பெரியாயி, சிறியாயி வைபவம்

முதலியாண்டான் பௌத்ரரான கந்தாடைதோழப்பர் ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கையில்; அவர் குமாரரான பெரிய வரதாசார்யர் சின்னவரதாசார்யர் இருவரும், ஜ்ஞாநபக்தி வைராக்ய நிஷ்டர்களாய், அழகியமணவாளப்பெருமாள் திருமேனி கைங்கர்யம் திருப்பவள கைங்கர்யங்களை ஆராய்ந்துகொண்டு, நித்யம் பாலமுது காய்ச்சி அமுது செய்யப் பண்ணுகையில்; ஒருநாள் ராத்ரி சின்னவரதாசார்யர் பாலமுது காய்ச்சிப் பெருமாளுக்கு அமுதுசெய்யப் பண்ணி, பெரியவரதாசார்யருக்குக் காட்டியருள; அவரும், அந்தப் பாலிலே த்ருணமிருக்கக்கண்டு, 'இது பெரிய பெருமாள் திருமிடற்றில் குத்தும்' என்று தொண்டை விக்கி மோஹிக்க; சின்னவரதாசார்யரும், அது கேட்டு

மூர்ச்சி2த்து, க்ரமத்திலே மோஹம் தெளிந்தவாறே, பெரிய பெருமாள் ப்ரஸந்நராய் இருவருக்கும் மாத்ருப4ாவனையாக **"பெரியாயி, சிறியாயி"** என்று திருநாமம் ஸாதி2த்தார். சில காலத்துக்குப் பின்பு, ராஜகோபத்தாலே பெரியாயி அதீ4நம்விட்டு, திருமழிசைக்கு எழுந்தருள; கந்தாடை தோழப்பரும், பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளினர்.

## ஈயான் ராமானுஜாசார்யர் வைப4வம்

சிலகாலத்துக்குப் பின்பு, தே3வப்பெருமாள், கந்தாடை தோழப்பர் ஸ்வப்நத்திலே, ஶ்லோகஷட்கத்தாலே 'உம்முடைய மூன்றும் குமாரராலே ஸ்தூ2லம் சேரப்போகிறீர்' என்று நியமிக்க; பின்பு, ஒருகாலத்திலே பெரியாயி திருவடிகளிலே அபசாரப்பட்ட கலிகாலசோழன் மாண்டு, சோழப்பட்டங்கள் குலைந்து, பஞ்சதிருவடி முத்துக்ருஷ்ணராஜா ராஜ்யம் பண்ணுகையில், அழகியமணவாளப்பெருமாள் அவன் ஸ்வப்நத்திலே, 'நம் கார்யம் பார்க்கைக்கு தே3வப்பெருமாள் ஸந்நிதி4யிலே போயிருக்கிற தோழப்பர் குமாரர் ஈயானை அழைப்பித்து, முதலியாண்டானதீ4நத்தைத் தத3தீ4நமாக்கும்' என்று சொல்லி நியமித்தபடியினாலே, அவனும் அவரை அழைப்பித்து, அவர் ஶிஷ்யனாய், பூர்வப்ரகாரம் எல்லாவற்றையும் அவரதீ4நம் பண்ணினன். அந்த **ஈயான் ராமானுஜாசார்யரும்**, வாதூ4லதே3ஶிகராய் அநேக கோ3புர ப்ராகார மண்டபங்களை ஜீர்ணோத்3த4ாரணம் பண்ணி, ஸ்வாமிக்கு நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவாதி3களையும் திருமேனி திருப்பவளோபசாரங்களையும் ப4யப4க்தியதிஶயத்தோடே நடத்திக்கொண்டு கார்யம் நிர்வஹித்தார்.

## எம்பெருமானடியாள் கோயிலைக்காத்தது

அவர் குமாரர் **திருக்கோபுரத்துநயினர்**, நரஸிம்ஹராஜா துரைத்தனத்தில், ப3ஹுகாலம் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தார். அவர் இரண்டாம் குமாரரான **சிற்றண்ணர்**, வாதூ4லதே3ஶிகபத3 நிர்வாஹகராய், ஸ்ரீரங்க3 ஸ்ரீகார்ய து4ரந்த4ரராய்,

பஞ்சதிருவடி கேஶவராஜாவைத் தொட்டு ஸ்வாமிக்கு அனைத்தழகும் கண்டருளப்பண்ணி, அநேக கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டிருந்தார். பின்பு, அவர் குமாரர் **ஸ்ரீரங்கராஜநாதன் வாதூலதேஶிகர்**, பஞ்சதிருவடி வீரப்பராஜாவாலே, அழகியமணவாளப்பெருமாளுக்கு அநேக கைங்கர்யம் நடப்பித்துக்கொண்டு, ஜ்ஞாநபக்தி வைராக்யாதிகராய், ஸ்ரீகார்யஸ்ரீயைச் சிந்தாமல் மங்காமல் பொங்கும்படி ஸகலோபசார வரிசைகளும் நடப்பிக்க; ஸ்ரீரங்கஸ்ரீயும் தினந்தினம் வ்ருத்தியடைந்துவர; ஸ்ரீரங்கராஜநாதனும் பஹுகாலம் அநபத்யராய், 'ஸ்ரீகார்ய நிர்வாஹத்துக்குப் பின்னுக்கு ஒருத்தருமில்லை' என்று விஷண்ணராயிருக்க; பகவதநுக்ரஹத்தாலே குமாரர் அவதரித்த பன்னிரண்டாம்நாள் **ந்ருஸிம்ஹதேஶிகர்** என்று திருநாமமும் சாத்தி, ஸ்வாமி ஸந்நிதிக்கு ஸேவைக்கு எழுந்தருளின காலம், ஶகாப்தம் ஆயிரத்துநூற்று நாற்பத்தொன்பதுக்குமேல் அக்ஷயஸம்வத்ஸரத்தில் 'துலுக்கர் தொண்டைமண்டலம் வ்யாபித்தார்கள்' என்று கேட்டு, ஸ்வாமி ஸந்நிதியிலே 'இங்கே எழுந்தருளியிருக்கிறதும், வெளியிலே எழுந்தருளுகிறதும் எது திருவுள்ளம்?' என்று திருவுள்ளச்சீட்டுப் போடுகையில்; 'அழகியமணவாளப் பெருமாள் எழுந்தருளியிருக்கிறதே திருவுள்ளம்' என்று நியமித்தபடியினாலே, திருநாள் ஆரம்பித்து நடக்கையில், பன்றியாழ்வான் கோவிலிலே பலிவெட்டு மண்டபத்திலே அழகியமணவாளப்பெருமாள் எழுந்தருளியிருக்கிற ஸமயத்திலே, துலுக்கர் சமயபுரம் கடந்து வருகிறதைக் கேட்டு; ஸ்ரீரங்கராஜநாதன் திருவோலக்கத்திலே எழுந்தருளியிருக்கிற பன்னீராயிரம் ஸ்வாமிகளையும் திருவோலக்கம் குலையாமலிருக்கும்படி நியமித்து; திருவாராதநம் நடக்கிறதாகத் திருத்திரைபரிமாறி, சிறு பல்லக்கிலே பெருமாளையேறியருளப்பண்ணி, ஒரு அர்ச்சகரையும் இரண்டு பரிசாரகர்களையும் ஸ்ரீபாதம் தாங்குவாரையும் ஶிஷ்யரோடுகூடப் பிள்ளைலோகாசார்யரையும் கூட்டித் தெற்கே அனுப்பி;

தாம் கோவிலிலே புகுந்து,சில திருவாப₄ரணப் பெட்டிகளேயும் திருப்பல்லக்கிலே ஸ்ரீரங்க₃நாய்ச்சியாரையும் சில பரிகரங்களேயும் கூட்டி அனுப்பி; பெரியபெருமாள் குலஶேக₂ரன்படி கல்திரைபரிமாறி, முன்னதாக ஒரு விக்₃ரஹத்தை வைத்துக் கதவைப்பூட்டி, நாய்ச்சியார் ஸந்நிதி₄யிலேயும் அந்தப்படி பண்ணி, மர்மஸ்த₂ாநங்களெல்லாம் திரோத₄ாநம்பண்ணி, தாம் திருவோலக்கத்தில் வர; துலுக்கரும் திரையில் புகுந்து விக்₃ரஹத்தைக் காணுமல், பன்றியாழ்வானே அபசாரப்பட்டு, ஸ்வாமிகளனைவரையும் திருமுடிதிருத்தி, கோவிலிலே ப்ரவேஶித்து, செம்பொன் வாசலிலிருந்த விக்₃ரஹத்தை அழித்து, தென்கரை வடகரை எல்லாம் குடிபடைகளுக்குச் சேதமில்லாதபடி எஜமாநன் அழகிய மணவாளன் திருமண்டபத்திலே குடியிருக்குமளவில்; எம்பெருமானடியாரிலே ஒருத்தி அவனை ஸந்தி₄த்து, அவனுடன் கூடியிருந்து நன்ருக வஶீகரிக்குமளவில்; அவனும் முன் நினைத்தபடி கோயிலை பா₃தி₄யாமல் இருக்குமளவில், பூர்வம் ஜீயர் யந்த்ரஸ்த₂ாபநம் பண்ணினதினுலே அவனுக்கு ஶரீரத்திலே வ்யாதி₄வருமளவில், அவன் 'இது தெய்வக்ருதம்' என்று நினைத்து, கோயிலை அழிக்கப் பார்க்குமளவில்; அந்த எம்பெருனடியாளுபாயமாக, அவனுக்குத் தெரியச் சொல்லி, அவன் நினைத்தபடி செய்யாமல் கோ₃புரமண்டபக் கொடுங்கைகளை அங்க₃ப₄ங்க₃ம் பண்ணுவித்து, த்₃வாரபாலகர்கள் முதலான சுற்றில் விக்₃ரஹங்களேயும் அங்க₃ப₄ங்க₃ம் பண்ணுவித்தார்கள். அவ்வளவிலே அவன் ஸந்துஷ்டனுயிருந்தான். அப்படியும் அவனுக்கு நாள்வரையில் நோய் விஞ்சினபடியினுலே, இவ்விடத்திலே இருப்பைவிட்டு, கண்ணனூரிலே மதிளைப்பிடுங்கிக் கோட்டை கட்டுவித்துப் போனவளவிலே, திருவிடையாட்டத்து அழகியமணவாளனிடக் காணியாளரில் **"சிங்கப்பிரான்"** என்கிற ப்₃ராஹ்மணர், அந்த எம்பெருமானடியாள் முக₂மாகத் துலுக்கனைக்கண்டு, அவன் வாசலுக்குக் கார்யகரராயிருந்துகொண்டு, கோயிலுக்குத் தீங்கில்லாதபடி ரக்ஷித்துக்கொண்டிருந்தார்.

## அழகியமணவாளப்பெருமாள், ஜோதிஷ்குடி திருமாலிருஞ்சோலை கோழிக்கூடு புங்கனூர் வழியாகத் திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினது

பெருமாளும், அன்றிரவு தம் நாய்ச்சிமாருடனும் அந்தரங்க₃ பரிஜநங்களோடும்கூடி, சிறந்த காட்டிலே எழுந்தருள; கள்ளர் தொடர்ந்து ஸர்வஸ்வாபஹாரம் பண்ண, அவ்விடத்திலும் அப்புறத்திலே போகையில்; அங்கங்கே செறுவஞ்சக்கள்ளர் எதிர்கொண்டு சிறப்புக்கட்டளை அமைக்க; அவர்கள் பூ₄ாவமறிந்து, அத்தை பரிக்₃ரஹியாமல் கடாக்ஷித்து, ஜோதிஷ்குடியிலே ஒரு மாஸம் எழுந்தருளியிருக்க; அங்கே பிள்ளைலோகாசார்யர் திருநாட்டுக்கெழுந்தருளி, திருவத்₄யயநாந்தமாகச் சரமகைங்கர்யம் நிறைவேறினபின்பு, திருமாலிருஞ்சோலையேற எழுந்தருளி, ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து, திருநாமத்தாலே ஒரு கிணறும் உண்டுபண்ணி, அவ்விடத்திலும் புறப்பட்டருளி மலையாளத்திலே எழுந்தருளி, அங்கங்கே அவரவர்களாலே ஸத்க்ருதராய் கோழிக்கூடேற எழுந்தருளி, அவ்விடத்திலே சிலநாளெழுந்தருளியிருக்க; அவ்விடத்திலே மற்ற தி₃வ்யதேசங்களிலெம்பெருமான்களும் நம்மாழ்வாருமெழுந்தருள, அந்த எம்பெருமான்களையும் ஆத₃ரித்தருளி, நம்மாழ்வாரைத் தம் தி₃வ்யஸிம்ஹாஸநத்திலே வைத்துக்கொண்டு ஒரு ஸம்வத்ஸரம் அங்கே எழுந்தருளியிருந்து; அவ்விடத்திலும் ஆழ்வாருடன் புறப்பட்டருளி, ஸமுத்₃ரத்திலே ஓடத்தின்மேலே எழுந்தருள, மத்₄யே ஆழ்வார் ப்ராமாதி₃கமாக ஸமுத்₃ர ஜலத்திலே எழுந்தருள, பெருமாள் தனித்து எழுந்தருளத் திருவுள்ளமில்லாதபடியாலே ஓடத்தைத் திருப்பி, பெருமாள் நியமநத்தினாலே கெருடன் வட்டமிட்ட விடத்திலே முழுகி ஆழ்வாரையெடுத்துப் பெருமாளுடன் சேர்க்க; பெருமாளும் ஆழ்வாருடன் திருக்கிணாம்பியிலே அநேகநாளெழுந்தருளியிருந்து, ஆழ்வாருக்குத் தம் வட்டமணையையும் முத்துச் சட்டையையும் ஸாதி₃த்தருளி,

ஆழ்வாரை அங்கே நிறுத்தி, தாம் ஸபரிகரராய் புங்கனூர் வழியாகத் திருநாராயணபுரம் எழுந்தருளினார்.

## பெருமாள் திருவேங்கடத்துக்கு எழுந்தருளியது

ஆழ்வாருடனே ஏகாஸநத்திலேயிருந்து ஏகபாத்ரங்களிலே திருவாராதநம் கண்டருளுகையில்; ஆழ்வார் திருப்படிக்கமும், பெருமாள் ஸ்ரீஶடகோபனும் ஸாதிக்கிறது. அதுமுதலாகப் பெருமாள் திருவாராதநமான வுடனே, திருப்படிக்கத் தீர்த்தம் ஸேனைமுதலியார் கோயிலிலே ஸ்ரீரங்கநாராயணஜீயர் முதலான பாரபத்தியக்காரருக்கு ஸாதிக்கிறது. பெருமாள் புறப்பட்டருளினால், அது முதலாக, நடையிலே சுந்தரபாண்டியன் கொண்டுபோகிற தில்லை. இந்தப்படி திருநாராயணபுரத்திலேயும் அநேக நாள் எழுந்தருளியிருந்து, ப்ரதக்ஷிணமாகத் திருவேங்கடத்துக்கெழுந்தருளி திருமலையிலே பஹுகாலம் திவ்யோத்ஸவத்துடனே எழுந்தருளியிருந்தார். §

## எம்பெருமானடியாளுக்குக் கட்டளையிட்டது

ஒரு காலவிஶேஷத்திலே நம்பெருமாள் ஸந்நிதியில் துலுக்கர்கள் பெருமாளுக்குத் திருமஞ்சனம் முதலியவைகள் செய்யவொட்டாமலும், கோயிலுக்கு யாரையும் வரவொட்டாமலும் உபத்ரவம் பண்ணிக்கொண்டிருந்தனர். இவர்கள் செய்யும் உபத்ரவத்தைப் பார்த்து மனம் ஸஹியாதவளாய், எப்படியாவது இந்த துலுக்கர்களை இவ்விடத்தினின்றும் துரத்தவேணுமென்கிற எண்ணங்கொண்டு ஒரு தினம் தான் அலங்காரத்துடன் கோயிலுக்குள் வந்தாள்.

§ பக்கம் 25-ல் "கோபணவுடையார்" என்று தொடங்கும் தலைப்பு முதல் பக்கம் 27-ல் "திருநாளும் கண்டருளினார்" என்று முடியும் முதல் பாரா ஈருக உள்ள பகுதியில் பெரும்பாலும் 1888-ம் ஞு பதிப்பில் இவ்விடத்தில் உள்ளது. 26-ம் பக்கம் 2-வது வரியில் "அவ்விடத்தில்" என்று தொடங்கி, 9-ம் வரியில் "யிருந்து" என்பது வரையிலும், 25-ம் வரியில் "அவருக்குத் தனியன் கொடுத்த" என்பதும் அப்பதிப்பில் இல்லை. அங்குள்ள பகுதிகள் இங்கிருப்பதே பொருத்தம்.

துலுக்கர்களிற் பெரியவன் இவளைப் பார்த்து ஆசைப்பட்டு அருகில் வந்தான். அவளும் இச்சைகொண்டவள்போல் இருந்தனள். துலுக்கனும் அவளைப் பார்த்து 'உங்கள் சுவாமி எங்கே' என்று கேட்டான். நான் காண்பிக்கிறேன் வாருமென்று கீழண்டை கோபுரத்தின்மேலே அழைத்துக் கொண்டுபோய், பரவாசுதேவரைக் காண்பித்தனள். அவன் அந்தப் பரவாசுதேவரை எட்டிப்பார்க்கும்போது அவனை அவ்விடத்திலிருந்து கீழே தள்ளிவிட அவனும் வீழ்ந்து இறந்துபோனான். அவளும் பிரமஹத்தியானது நம்மைப் பிடிக்குமென்று தானும் வீழ்ந்தனள். அவளுக்குமாத்திரம் உயிர்போகாமலிருந்தது. மற்றைய படைகளெல்லாம் விட்டு ஓடிப்போனவுடனே கோயிலுள்ள பரிஜநங்கள் யாவும் திருக்காப்பை நீக்கவந்து பார்க்குங்காலத்தில், அடியாளுக்கு மாத்திரம் உயிர்போகாமலிருக்கக்கண்டார்கள். உடனே யாவரும் சென்று பெருமாளுடன் முறையிட, பெருமாளும் அர்ச்சகமுகேந அடியாளிடம் வந்து அழைத்து,போர உகந்தருளி "உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்" என்று சொல்ல, அவளும் "எந்தக்காலத்திலும் திருநாடு அளிக்கிற காலத்தில் என்னுடைய வர்க்கத்துக்கெல்லாம் திருமடைப்பள்ளியிலிருந்து நெருப்பும் திருக்கொட்டாரத்திலிருந்து அமுதுபடியும் தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் எந்தக்காலத்திலும் ஸாதிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டனள். அதுமுதலாக அந்தப்படிநடந்துவருகிறது. /

/ பழைய பதிப்பில் இந்தப் பாரா "எம்பெருமானடியாளுக்குக் கட்டளை" என்னும் தலைப்போடு "பெருமாளும் நாய்ச்சியாருடனே சேரபாண்டியனிலே இனிதுடன் வீற்றிருந்து, எம்பெருமானடியாளை அழைத்து, போரவுகந்தருளி 'உனக்கு வேண்டியதைக் கேட்டுக் கொள்' என்று திருவுள்ளமாகையில்; அவள், 'என்னுடைய வர்க்கத்துக்குத் திருமடைப்பள்ளியில் கொள்ளியும், திருக்கொட்டாரத்திலே வாய்க்கரிசியும் அந்தகாலத்திலே ஸாதிக்கவேணும்' என்று கேட்டுக்கொண்டாள். அது முதலாக, அந்தப்படி நடந்து வருகிறது." என்று உள்ளது.

## திருவாழிக்கல் போகட்டது

இந்தப்படி திருநாள் நடக்கையில்; பூர்வப்ரகாரம் எட்டாந்திருநாள் விடிவோறே பெருமாள் எல்லைக்கரைக்கு எழுந்தருளுகிறபோது, ஆனைக்காவல் வடக்குத்தெருவில் ரங்க₃வாசலாலே உள்ளே எழுந்தருளி, அகிலாண்டே₃ஶ்வரிக்கு ஸேவைஸாதி₃த்து, இளநீர் அமுதுசெய்து, ஜம்பு₃ தீர்த்த₂த்திலே திருவடிவிளக்கி, கிழக்கே ஆழ்வார் திருமங்கைமன்னன் தோப்புக்கெழுந்தருளுகிறது. மற்றத் திருநாளிலே அந்தப்படி திருவடிவிளக்கி, அந்த வடக்கு வாசலாலே தானே திரும்பி உத்தமர்கோயில் ஆழ்வார் திருமாளிகையான கத₃ம்ப₃தீர்த்த₂த்துக்கு எழுந்தருளுமிடத்தில், சைவர் ப்₃ஹுஶாகக் கலஹம் பண்ணினபடியினாலே, தள்ளும் நூக்குமாக மூன்று வருஷம் கலஹத்திலும் நடந்தது; அதின்பின்பு, ஶகாப்₃த₃ம் ஆயிரத்திருநூற்றுத் தொண்ணூற்றேழுக்கு மேல் செல்லாநின்ற நளவருஷம் பங்குனி-மீ திருநாளிலே எட்டாந்திருநாள் பூர்வப்படிக்கு ஆனைக்காவலுக்கு ஸமீபத்திலே மேற்கே எழுந்தருளச்செய்தே, அநேகம் பாஷண்டி₃கள் ஆயுத₄பாணிகளாய் முன்னே வழிகட்டிக்கொண்டிருக்குமளவில், திருப்பணிசெய்வார் முன்போலே திருவீதி சோதனை பண்ணிக்கொண்டு போக, அத்தை அவர்கள் பொறுக்கமாட்டாமல், கொடவரான **வேலேந்தின பெருமாள்தா₃ஸரை** மெய்யறப் பார்த்து,க்ஷுத்₃ரக்ருதியையும் ப்ரயோகி₃க்குமளவில்; பெருமாளுடன் ஜீயர்களும் ஸ்ரீவைஷ்ணவர்களும் அனைத்துக்கொத்துப் பரிகரங்களும் விரக்தரும் ஏகாங்கிகளும் திருவிழாக்காரரும்கூட உபநிஷத்தைப்பாராயணம் பண்ணிக்கொண்டு,வீரவாத்₃யங்களுடனே ஆனையேற்றமும் ஸாதி₃த்து, உபநிஷந் மந்த்ரஜபத்துடன் அந்த மெய்யறுந்த திருப்பணி செய்வாரிருக்க, தடஸ்த₂ரான மட₂ாதி₄பதிகள் ஸமாத₄ானம்பண்ணி நல்ல வார்த்தையாலே பொறுப்பித்தார்கள். அதுக்குப்பின்பு, அவர் போகிற வழியிலே திருவாழிக்கல்லைப் போட்டுக்கொண்டு வந்தது. ஆனைக்காவல் ஸ்த₂லத்தார், தங்களுக்கு மாடுகள்

போகிறதுக்கு மாத்திரம் வழி கொடுக்கவேணும் என்று, பரிவர்த்தனையாக நிலமும் கொடுத்து அநுவர்த்தித்தபடியினாலே, அவர்கள் மதிளுக்கு மேற்கே பத்துபாத₃ம் அகலம் வழிவிட்டுத் திருவாழிக்கல்லைப் பொகட்டு, அதுமுதலாக எட்டாந் திருநாளுக்குக் கிழக்கே எழுந்தருளாமல் எல்லைக் கரையிலே எழுந்தருளுகிறது.

## பெரியகிருஷ்ணராயர் உத்தமநம்பி கைங்கர்யம்

இந்தப்படி ஸ்த₂லத்துக்குக் கலகம் தீர்ந்து, விஜயநக₃ரத்துக்கு நாலாறுதரம் போய், ஹரிஹரராயரை அநுவர்த்தித்து, ஶகாப்₃த₃ம் ஆயிரத்து முந்நூற்றுநாலுக்குமேல் செல்லாநின்ற ருதி₄ரோத்₃கா₃ரி வருஷம்முதல் ஈஶ்வர-ஹூ வரைக்கும் பதினைந்து வருஷம் ஹரிராயர், மஹாராயர், கோபண உடையார், விருப்பண உடையார், முத்தைய தெண்ணாயக்கர், தம்பணவுடையார், ப்ரத₄ானி சோமப்பர் தெண்ணாயக்கர், காரியத்துக்குக்கடவ அண்ணர், கோபணர் உள்ளிட்டார்கையில், உத₃கதா₄ரா பூர்வகமாக பெரிய கிருஷ்ணராயர் **உத்தமநம்பி** வாங்கின திருவிடையாட்டம்; இதுவும் ஆனையேற்ற மண்டபம் கலஹத்திலே ஜீர்ணமாகையில் அதைக் கட்டிவைத்ததும், **பெரியக்ருஷ்ணராயர் உத்தமநம்பி கைங்கர்யம்.**

### × நாக மங்க₃லம் அண்ணப்பவுடையார் கைங்கர்யம்

அமுதுமண்டபம் நாலு தூணுக்கும் செம்பின்மேல் பொன் பூசுவித்து, நடுவே திருப்போனகம் படைக்கிற பலகைக்கு வெள்ளித்தகடு போடுவித்தது **நாகமங்க₃லம் அண்ணப்ப உடையார்** கைங்கர்யம். இதை காலவிஶேஷத்திலே பிரித்து வெள்ளிக்கொப்பரை பண்ணிற்று.

### × திம்ம ராகுத்தர் கைங்கர்யம்

திருவணுக்கன் திருவாசலுக்கு மஹாதோரணமும் செம்பின்மேல் பொன்பூசிப் பண்ணுவித்து, திருக்கதவுக்கும் அப்படியே பூச்சுத்தகடு போடுவித்து, திருவரங்கச் செல்வனார் எழுந்தருளியிருக்கிற பீட₂த்துக்கும் பூச்சுத்

× சிறிய எழுத்திலுள்ள தலைப்புகள் பழம் பதிப்பில் மாத்திரம் உள்ளன.

தகடு போடுவித்தது, ஸாளுவகோபால ராஜாவின் மநுஷ்யன் திம்ம ராகுத்தர் கைங்கர்யம்.

**ஹரிஹர ராயர் கைங்கர்யம்**

அழகியமணவாளத் திருமண்டபத்தில் தூந்தத் திருப் பள்ளிக்கட்டில் மஞ்சமும் ஹரிஹரராயன் கைங்கர்யமாகப் பண்ணி வைத்ததும், பெரிய க்ருஷ்ணராயர் உத்தமநம்பி.

**வேதா₃ர்ய ப₄ட்டர் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தது.**

ஈஶ்வர வருஷம் முதல் விக்கிரம வருஷம்வரைக்கும் வேத₃ார்யப₄ட்டர் ஸ்ரீகார்யம் நிர்வஹித்தார்.

## கந்தாடையார் அதீ₄நமாயிருந்த உடையவர் ஸந்நிதி₄யை வேத₃ாசார்யப₄ட்டர் உடன்படிக்கைகொடுத்துத் தன் வசமாக்கினது

அதற்குப் பூர்வம் உடையவர் திருநாட்டுக்கெழுந் தருளின பின்பு; எதிராஜனைப் பெருமாள் நியமநத்தினாலே சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபத்திலே அர்ச்சாவ தாரமாக ஏறியருளப் பண்ணுவித்து அணைத்தழகும் நடத் தினது கந்தாடையாண்டான். ஆயிஉள்ளிட்டார் பரக்கத் திருமண்டபங்களும் கட்டுவித்து உபலாளித்தபடியினாலே, அந்தக் கோயில் கந்தாடையாரதீ₄நமாக நடந்துவர; திருவரங்கந் திருப்பதியிலே பெருமாளை ஸேவிக்கவந்த பரிஜநங்களுக்கு, பெரிய திருநாளிலே, அந்த எம்பெருமானார் ஸந்நிதி₄யிலே ஸந்நிதி₄ப்பேர், ஸமயமுத்₃ரையான திரு விலச்சினை ஸாதி₃த்து வந்தார்கள். துலுக்காவணத்திலே கோயில் திருக்காப்பைச் சேர்த்தபடியினாலே, பரிஜநங் களும் வாராமல் ஸமயமுத்₃ரை ஸாதி₃க்கிறதற்கில்லாம லிருந்தது. பின்பு, பெருமாளும் எழுந்தருளி, திருக்காப்பு நீக்கி, விருப்பண உடையார் திருத்தேர்த்திருநாளிலே பரிஜநங்களும் வர; தத்காலத்திலே அந்த ஸமயமுத்₃ரையை, ஸ்ரீப₄ண்டா₃ரம் என்று எம்பெருமானார் ஸந்நிதி₄யிலே ஸாதி₃க்கவொட்டாமல், வேத₃ாசார்யப₄ட்டர் தம் மநுஷ்யரை

